சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழக வெளியீடு—கசு



கடவுண் மாமுனிவர்

இயற்றியருளிய

# திருவாதவூரர் புராண மூலம்

அருஞ்சொற் பொருளகராதியுடன்






திருநெல்வேலி, தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி & சென்னை
துந்துபிஸு பங்குனிமீ 1923

# பொருளடக்கம்

# பதிப்புரை

இத் திருவாதவூரர் புராணம் கடவுண் மாமுனிவர் இயற்றியது. அவரைப்பற்றிய குறிப்புக்கள் ஒன்றும் அறிதற்கிடனில்லை. கிடைப்பின் மறுபதிப்பில் வெளியிடுவம். இப்புராணம் செம்பாகமாய்; சிருங்கார வருணனைகள் இல்லாததாய்; பத்திச்சுவை மலிந்ததாய்; சிவசின்னங்களின் பெருமையையும், சிவமூல மந்திரத்தின் மகிமையையும், சிவஞானபோதம் சிவஞான சித்தியார் முதலிய சைவ சித்தாந்த மகா சாத்திரங்களின் நுண்பொருள்களையும் ஆங்காங்கு இனிது விரிப்பதாய்; சிறுவர் பயிலுதற் கின்றியமையாத நூலெனா நெடுங்காலமாய்க் கையாளப்பட்டு வருகிறது.

இத்துணைப் பெருஞ் சிறப்பினதாகிய இந்நூலின் மூலபாடம் இப்போது ஒரு வருடகாலமாகப் பெறுதற் கருமையா யிருப்பதுபற்றி எம்மை விரைவின் அச்சிடுவிக்க அன்பர் பலர் கேட்டுக்கொண்டபடி, பிழையறப் பரிசோதித்து அவசியமான பாடபேதங்களுடன் இதனை வெளியிட்டிருக்கின்றோம். இப்பதிப்பிற்கு, திருவாதவூரடிகள் வரலாற்றுச் சுருக்கம் எழுதியுதவிய சென்னைக் கிறித்தவ கலாசாலைத் தமிழாசிரியர் திருவாளர் வா. மகாதேவ முதலியாரவர்களுக்கும், அருஞ்சொற் பொருளகராதியும் பிழைதிருத்தமும் எழுதிக் கொடுத் துதவிய சூளை மருத்துவாசிரியரும், தமிழ்ப்புலவருமான திருவாளர் மா. வடிவேலு முதலியாரவர்களுக்கும் என்றும் மறவா நன்றியளிக்கக் கடமைப்பட்டுள்ளோம்.

திருநெல்வேலி,
10—3—1923.

இங்ஙனம்,

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

# திருவாதவூரடிகள் வரலாற்றுச் சுருக்கம்

---

பாண்டி நன்னாட்டில் வைகையாற்றங் கரையின்கணுள்ள திருவாதவூரென்னும் திருப்பதியிடத்தே அமாத்தியரென்னும் அந்தணர் குடியின் அவதரித்து அடிகள் பதினாறாண்டு நிரம்புமுன் எக்கலையுங் கற்றுணர்ந்து நல்லொழுக்கின் றலை நின்று பல்வகைப் பண்பினரும் நண்பினரும் நன்கு வியந்து சீர் போற்ற விளங்கினராக, அவரது சீர்மையைப் பல ஆன்றோர்களாற் கேட்ட அரிமர்த்தன பாண்டியனென்பான் அவரை அழைப்பித்து அவர் மதித்திறங் கண்டு நன்கு மதித்து அவரைத் தனக்கு முதன் மந்திரி யாக்கித் 'தென்னவன் பிரமராயன்' என்னும் சிறப்புப் பெயர் தந்து அவர் சொல்வழி நின்று அரசு புரிகையில் அடிகளுக்கு உலக வாழ்க்கையின் உவர்ப்புத் தோன்ற உயிர்க்குறுதி யாதெனவும் அதனை நாடுமாறு யாதெனவும் உசாவி அதுபற்றிக் கேட்டனவெல்லாம் நீர் விடாய்க்குண்டுவர் நீர் போல அவர் வேட்கையை மிகுவிக்க அவர் 'ஆசாரியன் என்று வருவன்? என்று நமது ஐயம் யாவும் அகலும்? என்று இந்த வூனடைந்த வுடம்பின் பிறவியை யான் அடைந்த பயன் கைவரும்?' எனப் பரிந்து நிற்புழிக் குதிரைக்காவலர் சிலர் அரசன்மாட் டணுகி 'மன்னர் மன்ன! நமது குதிரைப்பந்தியில் மூப்புற்றும், நோய் கொண்டும்

குதிரைகள் பல மாண்டன; நற் குதிரைகள் சிலவே உள; இப்போது சோழமண்டலக்கடற்கரைக்கண் குதிரைகள் வந்திருக்கின்றன; குதிரை கோடற்குத் தக்க சமயம் இதுவே!' என விண்ணப்பிக்க, அரசன் அடிகளை அழைத்து 'நமது பண்டாரந் திறந்து வேண்டும் பொருள் கொண்டு சென்று குதிரை கொணர்க!' என்ன அங்ஙனமே அடிகளும் பொருள் நிறைய வாரிக்கொண்டு குதிரை கொள்ளப் புறப்பட்டுச் செல்லும் வழியில் திருப்பெருந்துறையை யடைந்து அங்குக் குருந்த மரத்தடியில் ஆசாரிய மூர்த்தமாக எழுந்தருளியிருந்த பெருமானைக் கண்டு புளகங் கொண்டு பன்முறை வணங்கி 'பெரும! அடியேனை ஆட்கொள்க' எனக் குறையிரந்து அவர்பால் ஞானோபதேசம் பெற்றுக் குதிரை கொணரக் கொண்டுசென்ற அரசன் பொருளைச் சிவாலயத் திருப்பணிக்குஞ் சிவனடியார்களுக்குமாகச் செலவிட்டுச் சிவானந்த மேலிட்டிருந்தலைப் பாண்டியன் கேள்வியுற்றுச் சினந்து அவரைத் திரும்பி வருமாறு நிருபம் விட அடிகள் அதனைப் பெருமாற்கு அறிவித்து முறையிட அவர் தந்த விலைமதிக்கப்பெறாத மாணிக்கமொன்றைப் பெற்றுக் கொண்டு பாண்டியன்பாற் சென்று அதனை ஈந்து மகிழ்வித்து 'அரச! குதிரைகள் ஆவணித்திங்கள் மூலநாளில் வரும்' என்றதும் அது மெய்யெனக் கொண்டிருந்த அரசன் தூதராற் பொய்யென அறிந்து அவரைச் சிறையிலிருத்தி வருத்த, அவர் வருத்தங் கண்டு பொறாத பரமன் நரிகளைப் பரிகளாக்கிக் கொணர்ந்து அரசன்பா லொப்பித்துப் பின் அவற்றை மீளவும் நரிகளாக்க, அஃதறிந்த அரசன் அடிகளைச் சூரியன் வெங்கதிர் சுடச் சுடுமணலிற் கல்லேற்றி நிறுத்திப் பின்னும் வருத்தப் பரம்பரன் வைகையாற்றின் வெள்ளம் பெருக்க, மதுரை ஒழியுமோ வென அஞ்சி ஊரரைக்

கொண்டு கரை அடைப்பிக்கப் பராபரன் ஒரு பிட்டு வாணிச்சிக்குக் கூலியாளாய் வந்து மண்சுமந்து அடிபட்டு அடிகள் பெருமை அரசற்கு நன்கு அறிவுறுத்த, பின் அடிகள் மதுரையினீங்கித் திருப்பெருந்துறையிற் சிலகாலம் தங்கிச் சிவபெருமானேவியவாறே திருவுத்தரகோசமங்கை முதலிய பல திருப்பதிகளுக்குச் சென்று திருப்பதிகங்கள் பாடிச் சிதம்பரமடைந்து பௌத்தர்களோடு வாதஞ் செய்து ஊமைப்பெண்ணைப் பேசுவித்து வென்று அவர்கள் எல்லாரையும் சைவராக்கி அங்கு அமர்கையில், அம்பலவாணன் ஓர் அந்தண வடிவங்கொண்டு அடிகளை அடைந்து திருவாசகமெழுதித் திருக்கோவையார் பாடுவித்து 'அதனையும் எழுதிக் கைச்சாத்திட்டு அப்பிரதிகளைப் பொன்னம்பலத்து வாயிற்படியில் வைப்ப, அவற்றைக் கண்ட அடியார் படித்துப் பொருள் காணாது மயங்கி அடிகளையடைந்து 'அடிகாள்! இவற்றின் பொருள் விரிக்க' எனக் குறையிரந்து கூற, அவரும் அதற்கொருப்பட்டுக் கனகசபை புகுந்து 'அவற்றிற்குப் பொருள் இவரே' என நடராச மூர்த்தியைக் காட்டி உட்புகுந்து அம்மூர்த்தியோடு இரண்டறக் கலந்தார்.

## அடிகள் சரிதங்கூறும் புராணங்கள்.

1. திருவுத்தரகோசமங்கைப் புராணம்
2. திருவாதவூரர் புராணம்
3. திருவாலவாயுடையார் திருவிளையாடற் புராணம்
4. பரஞ்சோதிமுனிவரியற்றிய திருவிளையாடற் புராணம்
5. திருப்பெருந்துறைப் புராணம்

மேற்கண்ட புராணங்கள் ஐந்தனுள்ளும் அடிகள் வரலாற்றிற் சிற்சில வேறுபாடுகள் உண்டு. அவற்றை ஈண்டு விரிப்பிற் பெருகும்.

திருப்பெருந்துறைப் புராணம் அடிகளின் பெற்றோர் பெயர் சம்புபாதாசிருதர், சிவஞானவதியா ரென்னும்.

"குராமலரோ டராமதியந் தலைமேற் கொண்டார்
குடமுழநந் தீசனைவா சகனுக் கொண்டார்"

என்னுந் திருத்தாண்டகங் காட்டி அடிகள் திருநந்திதேவ ரென்பர் ஒரு சாரார்.

அடிகள் அருளிச்செய்த திருவாசகம், திருக்கோவையார் ஆகிய இவ்விருநூல்களும் சைவத்திருமுறைகள் பன்னிரண்டனுள் எட்டாவதாகலானும், பதினொராந் திருமுறையிற் பட்டினத்தடிகள் பாடல்களின் அடிகளைப் பற்றி வருதலானும், நச்சினார்க்கினியர் பரிமேலழகருரைகளில் திருவாசகம், திருக்கோவையார் இந்நூல்களினின்று மேற்கோள் காட்டப்பட்டிருத்தலானும், அடிகள் தமிழ் நடையானும், எடுத்தாளும் பழமொழிகளானும், திசைச்சொற்களானும், அடிகள் காலம் சற்று முன்பின்னாக ஆயிரத்தைந்நூறு ஆண்டுகளாகின்றன வென்பர் பெரியார்.

அடிகள் திருவாதவூரடிகள் எனவும், ஆளுடைய வடிகள் எனவும், மாணிக்க வாசகர் எனவும் பெறுவர்.

வா-ம.

உ

திருச்சிற்றம்பலம்.

# திருவாதவூரடிகள்புராணம்.



## காப்பு.

பவளமால் வரையி னிலவெறிப் பதுபோற்
பரந்தநீற் றழகுபச் சுடம்பிற்
றிவளமா துடனின் றாடிய பரமன்
சிறுவனைப் பாரதப் பெரும்போர்
தவளமா மருப்பொன் றொடித்தொரு கரத்திற்
றரித்துயர் கிரிப்புறத் தெழுதுங்
கவளமா* களிற்றின் றிருமுகம் படைத்த
கடவுளை நினைந்துகை தொழுவாம். (க)

## கடவுள்வாழ்த்து.

### நடராசர்.

இதந்தரு மடந்தையொ டியைந்துயி ருடம்புபோல்
விதம்படு லகங்களில் விரிந்தொளி விளங்குவார்
மதங்கமொ டுதுந்துபி வளங்கெழ முழங்கவே
சிதம்பர நடம்பயில் செழுங்கழ லிறைஞ்சுவாம். (உ)

* கவளமா முகத்தின் என்றும் பாடம்.

## சிவகாமியம்மையார்.

ஆடக சிதம்பர வணங்குமை யணங்கிலா
நாடக னனந்தசுக நன்குபுனை பங்கினள்
ஏடக மணம்பொருவ வெங்கணு மியைந்துளாள்
பாடக மிலங்குசிறு பங்கய மிறைஞ்சுவாம். (௩)

## சுப்பிரமணியக்கடவுள்.

துங்கமத கும்பவுயர் *தும்பிமுகர் தம்பிசீர்
தங்குநெகி ழுஞ்சிறு சதங்கைகள் புலம்பவே
மங்கையுமை கண்குளிர வந்துலவு கின்றதாள்
அங்கைமலர் கொண்டுமிகு மன்புட னிறைஞ்சுவாம். (௪)

## நூல்வரலாறு.

தென்பொதிய மாமுனி சிறக்கவரு ளெண்ணெண்
இன்பவிளை யாடல தெனுங்கடலு ளுறையேன்
மின்பயிலு மாமதுரை மேவுதமிழ் மாறன்
துன்பமற நல்குகதை சொல்லலுறு கின்றேன். (௫)

## நூல்நுதலியபொருள்.

அற்புத னிருந்தருள் பெருந்துறை யடைந்தே
சிற்பர முணர்ந்துதிரு வாசக முரைப்பார்
முற்பக லருந்தவ முயன்றுபெறு மன்பால்
உற்பவ மொழிந்தமை மொழிந்திட மொழிப்பாம். (௬)

## அவையடக்கம்.

கொண்டலன கண்டனருள் கொண்டு தமிழ்பாடித்
தொண்டுபடு மன்பர்செயல் சொன்னநெறி தன்னால்
வண்டமிழ் தெரிந்தவர்கண் மற்றெனுரை குற்றம்
உண்டெனினு நன்கிதென வுள்ளுவர்க ளென்னார். (௭)

---

* தும்பிமுகனெம்பி என்றும் பாடம்.

## நூற்பயன்.

இந்தவள நற்கதை யியம்பினர் நயந்தே
சிந்தையி னினைப்பவர் செவிப்புல நிறைப்போர்
புந்திமகி ழப்புவி புரப்பருடல் விட்டால்
அந்தவுல கந்தனி லரன்சபையில் வாழ்வார். (௮)

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

---

# மந்திரிச்சருக்கம்.

முக்கணொரு நான்குபுய வைந்துமுக முன்னோன்
சொக்கனரு ணன்மைபெறு தொன்மைதிகழ் நன்னா
டக்கடவி டத்தையர னுக்கருள்வ தென்றே
மைக்கடலில் வைகலொழி வைகைவள நாடு. (௯)

நீண்டகயி லைக்கிறை நிகழ்த்தவரு னாலே
பூண்டமுனி மெய்த்தமிழ் புகன்றதிரு நாடு
மூண்டபகை செற்றுலக முற்றுமர சாளும்
பாண்டிய னலங்குலவு பாண்டிவள நாடு. (௰)

### வேறு.

மேவுமூர் வளம்பலவு மிகுந்துளநா டதனுணலம்
பாவுமூர் பழமறைதே ரந்தணர்கள் பயின்றுளவூர்
தாவுமூர் விடையேறி தங்கியவூ ரங்குறையுந்
தேவரூ ரினுமேன்மை சிறந்ததிரு வாதவூர். (௰௧)

அந்நகரின் மறையோரி லருள்புனைமாத் தியர்குலத்துத்
தன்னிகரில் சைவநெறித் தலைவனவன் றனித்தேவி
மின்னனையா டிருவயிற்றின் மென்கொடிபங் கினனருளாற்
றென்னவன்செங் கோன்முதல்வர் திருவவதா ரஞ்செய்தார். (௰௨)

## வேறு.

பொய்மையா மூலகின் மாயப் பொங்கிரு ளகல வன்னோர்
தம்மையாழ் நரகிற் றள்ளுஞ் சமயதா ரகைம ழுங்க
எம்மையா ளுடையா னன்ப ரிதயதா மரைக ளெல்லாஞ்
செம்மையாய் மலர ஞான தினகர ருதயஞ் செய்தார். (கந)

## நாமகரணம்.

## வேறு.

மருவாத நெறிபூண்ட மத்தனெனும் புத்தனுடன்
பெருவாது வென்றுசிவன் பெருநாம மிகவளர
ஒருவாத பிறவியிற்சென் றொருநாம முறுதவர்க்குத்
திருவாத வூரரெனுந் திருநாமந் தரித்தார்கள். (யச)

## வேறு.

தவமெனும் பெரிய வித்துட் டங்கியே யங்கு ரித்துப்
பவமெனும் பங்க நீங்கிப் பயிலருட் குருத்துண் டாகி
அவமெனுங் களைக ணீங்கி யாக்குவோ னருளா லுண்மைச்
சிவமெனும் விளைவுண் டாக வளர்ந்தது தெய்வச் சாலி. (யரு)

## அன்னப்பிராசனம்.

## வேறு.

தேனினொடு கரும்பினெழுஞ் செழும்பாகு முக்கனியும்
ஆனினறும் பாலுமுட னளவியுளங் களிகூர
ஈனமிகும் பலயோனிப் பிறவியெனும் பசிதீர
ஞானவமு துண்பார்க்கு நயந்தமுது நுகர்வித்தார். (யசு)

## சிகாகருமம்.

காயமுட னுயிர்முயலுங் கருமமெலாம் பரனருளாற்
றூயமனத் துணர்ந்துவினைத் தொகையெழுதி நாடோறும்
ஆயதுயர் சுகமளிக்கும் யமன்கணக்கி லரும்பாவத்
தீயசிகை யில்லார்க்குச் சிறந்தசிகை வருவித்தார். (யஎ)

## வித்தியாரம்பம்.

குவலயமங் கையைநீடு கோலஞ்செய் தரும்பொன்னும்
நவமணியுங் குழைசெய்து நன்குடன்மங் கலநாளிற்
றவமணமுந் திருநீற்றின் றன்மணமுந் தவறாத
சிவமணமும் பெறக்கல்விச் செல்விமணம் புணர்வித்தார். (௰அ)

## உபநயனம்.

இதுநூன்மற் றல்லதுநூ லில்லையெனு மறுசமய
விதநூலுந் தலநூலும் விரிந்தபுரா தனநூலும்
பொதுநூலென் றுலகனைத்தும் புகழ்மறைநூ லுஞ்சைவ
முதுநூலுந் தரிப்பார்க்கு முந்நூலுந் தரித்தார்கள். (௰கூ)

மிக்கலையுஞ் செழுநீரு மதிக்கலையு மிலைக்குமவர்
அக்கலையுந் தோளர்புலி யதட்கலையர் நல்லருளால்
ஒக்கலையும் பிறக்கலையு மொழித்திடுமா கமகலையும்
எக்கலையுங் கற்றுணர்ந்தா ரீரெட்டாண் டெல்லையினில். (உ௰)

உழைக்காளுக் கன்பாகி யுண்மையறிந் துலகமெலாம்
பிழைக்கவருட் கவிபாடும் பெரியவர்தஞ் செயலெல்லாந்
தழைத்தகலைத் தமிழ்மாறன் றக்கோர்க ளுரைப்பவறிந்
தழைத்துரிமைத் திறநல்கி யகலாநண் பாயினன். (உக)

சங்கோல மிடும்பழனத் தடம்புடைசூழ் வாதவூர்
எங்கோவின் செய்கையறிந் தியல்புடையோ ரெனநாடிப்
பொங்கோத வேலைநிலம் புரந்துபெரும் பகைதுரந்து
செங்கோன்மை முறைநடத்துஞ் செழுந்தலைமைத் திறநல்கி. (உஉ)

### வேறு.

தென்னவன் பிரம ராய னென்றருள் சிறக்கு நாம
மன்னவர் மதிக்க நல்கி வையக முய்வதாக
மின்னவ மணிப்பூ ணுடை வெண்மதிக் கவிகை தண்டு
பொன்னவிர் கவரி வேழ மளித்தனன் பொருநை நாடன். (உங)

இந்திரச் செல்வம் போல விசைந்துள வின்ப மெய்தி
மந்திரத் தலைமை பூண்ட வண்புகழ் வாத வூரர்
தந்திரத் தொகுதி சூழத் தாரகா கணங்க ளோடும்
அந்தரத் திழிந்து மண்மே லமர்ந்தவெண் மதிய மொத்தார். (உச)

பெருங்கட ஞக நீதி பெருக்கியே தருக்கு நல்கி
இருங்கட கத்தோண் மேல்வைத் தீண்டருள் பூண்ட கோவுங்
கருங்கட நாக மெட்டுங் காளமா நாக மெட்டும்
பரங்கெட வுலக பாரம் பரித்தனர் திருத்த மிக்கார். (உரு)

காதலித் தறஞ்செய் வோர்க்குக் கவசமுங் கண்ணு மாகி
ஏதிலர்க் கிடும்பை யாகி யிறைஞ்சினர்க் கின்ப மாகி
ஆதுலர்க் கன்னை யாகி யரனடிக் கன்பு மிக்கார்
பூதலத் திறைவ ஞணை பொதுவற நடத்து நாளில். (உசு)

பற்பல பொருளா யுள்ள பாசமு மதனை மேவி
உற்பவ பேத மான வுடம்புயி* ரொடுங்கு மாறும்
அற்புத புத்தி முத்தி யளித்தரு ளாலே மேலாந்
தற்பர னடத்து மாறு முணர்ந்தனர் சைவ நூலில். (உஎ)

அவ்விய மனத்தி ஞலே யனைத்துரு வங்கள் கூடி
இவ்வுயிர் பிறந்து மீள விறந்திடு மென்றி ரங்கி
வெவ்வெயில் வருத்த முற்ரூர் மென்னிழல் விரும்பு மாபோல்
நவ்வியு மழுவு மேந்து நம்பனுக் கன்பு மிக்கார். (உஅ)

தீத்திற வினையி ஞலே சிறைப்படு முயிரை யெல்லாம்
பார்த்தன ருலக வாழ்விற் பயனிலை யென்று தேர்ந்து
கூத்தினர் தன்மை வேறு கோலம்வே ருகு மாபோல்
நீத்தனர் மனத்தின் முன்போ னிகழ்த்தினர் வழுதி நீதி. (உகூ)

---

* எடுக்குமாறெனவும் பாடம்.

வாமுடன் புவியிற் றோன்று மறையவர்க் கிறைவ ருண்மை
தருமுணர் வென்னு நாலாஞ் சத்திநி பாத மெய்திப்
பரமவஞ் செழுத்து மொன்றும் பராபர முணர்த்து ஞான
குருபரன் றிருத்தாள் சென்று கூடுதல் வேண்டு மென்று. (௩௰)

மற்கட விலங்கு தன்னால் வளங்கெழு விளவின் மேவு
நற்கனி கொள்ள வேண்டி நயந்துகல் லெறிவார் போலச்
சற்குரு வுளனோ வென்று நாடுவார் தர்க்க மெல்லாஞ்
சொற்கலை ஞான சைவர் தம்முடன் சொல்ல லுற்றார். (௩௧)

வளங்கெழு புவியி லுள்ள வாவியுங் காவு மோடி
விளங்கிசை வண்டு தண்டேன் மிகுமலர் தேடு மாபோல்
உளங்கொள நிமல னன்னூ லோதின ருண்மை யெல்லாம்
அளந்தறி வுணர்ந்த நீரர் யாவரென் றுயு நாளில். (௩௨)

வேறு.

மேதகு வணிதைய ரெங்கணும் வீசிய கவரி யசைந்தெழ
மாதவ முனிவர்க ளந்தணர் மாசறு கவிஞர் செறிந்திட
ஏதமின் மதிகுல புங்கவ னேர்கெழு மணிமுடி யின்றிரள்
ஆதவன் மிசையெழ வந்தரி யாசன மதனி லிருந்தனன். (௩௩)

தாதகி மார்ப னெடும்புவி சார்தரு மாழ்கட லின்கரை
தீதில மாதுர கங்கொடு சீர்கெழு மாரியர் வந்தனர்
ஏதமி லாயது கண்டனம் யாமென வேதொழு தன்பொடு
மேதினி காவலன் முன்சில மேதகு தூதர்வி ளம்பினர். (௩௪)

ஏவல்செய் வார்களி லிங்கிவ ரேபரி வானவ ரென்றிகன்
மேவிய தூதரை வன்றிறன் மீனவர் கோனு மகிழ்ந்துபின்
வாவுநன் மாதுர கங்கொடு வாருமெ னவுட லுந்தன
தாவியு மாயர னன்புடை யார்முக நாடி மொழிந்தனன். (௩௫)

மீனவர் கோன்மொழி யின்படி வேணிய னேச ரியைந்தபின்
ஆனன சோதியு டன்புவி யாள்பவன் வாசிகொ ளும்படி
வானவி மானமெ னுந்திரு வாழ்வுள கோயில் புகுந்துதன்
ஈனமி லாநெறி வந்தபொன் னேழெழு கோடி வழங்கினன். (௬௬)

விற்படை வெற்றி மடந்தையு மிக்க மலர்த்திரு வும்பயின்
மற்புய வெற்பின னங்கயல் வைத்த வலத்தன் வழங்கிய
பொற்பு மிகுத்த தனங்கொடு பொற்கவ னப்பரி கொண்டிட
நற்பய ணத்தை முயன்றனர் நக்கனை நெக்குணர் கின்றவர். (௬௭)

மெய்த்தவ ருற்ற பெருந்துறை வித்தக ரைக்குறு கும்படி
இத்தகு நற்பொருள் கொண்டுகி ரிப்படி யிற்செலு மென்றலின்
அத்தகு புத்தி யொழிந்துயி ரற்புத முத்தி பெறும்படி
உய்த்துள சத்தி யுடன்பொரு வொத்தன னுத்தம பஞ்சவன். (௬௮)

பற்றிலர் பெற்ற சிவன்கழல் பற்றின ரைக்கலை வண்டமிழ்
உற்ற மலைக்கிறை வன்றனை யொக்க மதித்தருள் கொண்டலை
விற்றுவ சத்த னெடும்படை மிக்க புலிக்கொடி யன்படை
மற்றுள கொற்றவர் தம்படை வர்க்கமு முற்கொ டெழுந்தன. (௬௯)

உக்கிர நச்சுர கங்களி னுச்சி பனிப்ப வசைத்தடி
வைக்கு முரத்தன வெங்கய மைக்கிரி யொக்க மலிந்தன
பக்கமு முற்பிற குந்துடி பற்பல கொட்ட வியங்குவ
தக்கம னத்தில் விரைந்துள தத்து பரித்திரள் வந்தன (௭0)

வேறு.

கொங்கணர் கலிங்கரொடு கொங்கர்துளு நாடர்
சிங்களர்க ளொட்டியர் தெலுங்கரொடு சீனர்
தங்குதிறன் மாளவர் மலாடர்தமி லொன்றாய்
எங்கணு மிடைந்தவர்க ளெண்ணமுடி வில்லார். (௭௧)

இத்திற மெழுந்தபடை யெங்கணுநெ ருங்கத்
தத்துபரி மீதுள தமிழ்க்கவிஞர் சூழச்
சித்திர மடந்தையர் திரண்டிரும ருங்கும்
மொய்த்துவர வீணைகுழன் முன்னரிசை கொள்ள. (௪௨)

கட்டுமள கத்தினர் கனத்துளத னத்தர்
பட்டுடை மருங்கினர் பனிக்கவரி வீச
வட்டமதி வெண்குடை வயங்கமுர செங்குங்
கொட்டவுயர் காளமொடு கோடுகள்க றங்க. (௪௩)

மிண்டியுள பாடகர் வியந்துகர வாரங்
கொண்டுபுடை சூழவெழில் சேர்குழலர் பாடத்
தண்டரள மல்கிய தவளச்சிவிகை மேல்கொண்
டெண்டிசை மிகப்புகழ் கயற்கொடியி லங்க. (௪௪)

மங்கல தினத்தினெடு மாளிகை யகன்றே
துங்கமணி யக்கையணி சொக்கரை வணங்கி
அங்குவிடை பெற்றுமறை யந்தணரின் மிக்கார்
திங்கண்மர பிற்குரிசில் கோயிலுழை சென்றார். (௪௫)

சென்றுதமிழ் மாறனருள் பெற்றெழில் சிறக்கும்
வென்றிவள வன்புவியின் மேன்மையொடு செல்வார்
குன்றனைய மாடமொடு கோபுர நெருங்கும்
நன்றிமது ரைப்பதியை நன்கொடு கடந்தார். (௪௬)

நெடுங்குட திசைக்கட னிறைந்தொலி சிறந்தே
உடைந்துதய நற்றிசையி லுற்றுவரு மாபோன்
மிடைந்தபதி யுங்கடமும் வெற்புமிவை யெல்லாங்
கடந்துவதி சென்றுபல காவத மகன்றார். (௪௭)

என்றுமுள பொன்றுமுட லென்னுநகர் தோறுஞ்
சென்றவழி மாறியொரு தெய்வவழி செல்வார்
நன்றியுள முத்திபெற நம்பர்தம தன்பால்
அன்றுயர் பெருந்துறை யடைந்தபடி சொல்வாம். (சஅ)

மந்திரிச்சருக்கம் முற்றிற்று.

இச்சருக்கத் திருவிருத்தம் - சய.

# திருப்பெருந்துறைச்சருக்கம்.



வேறு.

பழமறை முழுதுண ரந்தணர் பலர்தொழ நடமுயல் கின்றவர்
மழுவுழை கரம்சை கொண்டிட மருவிய கவுரி மகிழ்ந்திட
விழைதரு மிரசித பொங்கொளி விடுமுயர் கயிலை விலங்கலில்
அழகுறு தபனிய மண்டப மதனிடை யருள்கொ டிருந்தனர். (சக)

மதுமலர் கரம்சை கொண்டுநின் வழிவழி யடியவ ரென்றுதம்
முதுமறை தெரிய மொழிந்தெதிர் முறைமுறை முனிவர்வணங்கினர்
இதுபர னருளை வழங்குவ தெனவரி பிரம ரெழுந்துநம்
பதநிலை பெறவரு ளென்றிரு பரிபுர கழல்கள் பணிந்தனர். (ருய)

பரவரு மணிகள் விளங்கிய பணவர வணியர ணங்கமு
மருவிய தரள வடந்திகழ் மதிநுதன் மலைமக ளங்கமும்
இரவியு மதியு மிருந்தென வெதிரெதி ரிலகுதல் கண்டனர்
அரகர சிவசிவ வென்றுள மயர்வுற வழுதன ரன்பினர். (ருக)

அடியொழி மரமென நொந்துபி னவனியில் விழுவதொ ழிந்துநின், உடனுறை பெருமை வழங்குவ துளதுகொ லெனநினை நெஞ்சொடு, மடலவிழ் கடிகம ழைந்தரு மலர்பல முறைமுறை சிந்திமுன், இடபமிசை தெனமகி ழிந்திர னிமையவ ரெவருமி றைஞ்சினர். (ருஉ)

## வேறு.

திண்டிறன் மிகுஞ்சுரிகை யுந்திகழ் பிரம்புங்
கொண்டருகு நின்முகுரு நந்தி*யருள் கூறப்
புண்டரிக மாதுபுவி மங்கையெழில் சிங்கா
அண்டர்மட வார்களுல கன்னைபுற மன்ன. (ருங)

துன்னுபல பூதகண நாதர்புடை சூழக்
கின்னரர்கள் கந்தருவர் கீதவிசை பாட
மின்னுமுடி மன்னுநதி வீசுதிரை நன்னீர்
என்னவொளிர் சாமரை யெழுந்தழகு செய்ய. (ருச)

இந்தவுள மல்குசபை யின்னல்கெட மன்னுந்
தந்தைமணி மன்றிலுறை தாண்டவ பதத்தோன்
செந்தமிழின் வந்தசிவ ஞானவமு துண்டாம்
அந்தமி லருட்கடலை யாண்டருள வேண்டி. (ருரு)

மைத்தகடன் மண்ணவர்க டம்முருவில் வம்மென்
றத்தகைய பத்தர்கண நாதரை யழைத்தே
சித்திதரு தேசிகர் சிறந்தவடி வங்கொண்
டுத்தம நெடுங்கயிலை யோங்கலது நீங்கி. (ருசு)

கொன்னெறுழி தன்னுருவு கொண்டொருவர் தேடும்
பொன்னடி யெனுஞ்சலச மண்மிசை பொருந்தப்
பன்னுமறை வல்லவர் பரிந்தழல் வளர்ப்பார்
மன்னுமொரு தெய்விக வளம்பதியில் வந்தார். (ருஎ)

வெம்பிறவி வேலைதனில் வீழ்பவர்க ளெல்லாம்
நம்புசிவ நாமமெனு நற்புணை பிடித்தால்
எம்பா னருட்கரையி லேறுதுறை யாமால்
அம்புவி மொழிந்துள பெருந்துறை யதன்பேர். (ருஅ)

---

* அகச்சந்தானத்துள் முதற்குரவராகலின் குருநந்தி யென்றார்.

ஈனமில் பெருந்துறை யெனும்பதியின் ஞாங்கர்க்
கானமிகு புன்னைவளர் கந்தமுள சந்தம்
வானமுயர் சண்பக மரந்திகழ் நரந்தந்
தேனின முரன்றெழு செருந்திகள் பொருந்தி. (நக)

கோடுகவி னும்பெரிய கோங்குமிக வோங்கும்
பாடல நெடும்பலவு பைங்கமுகு தெங்கு
நீடளி யிரைத்தெழு நிரைக்குரவு சூதம்
ஏடவிழ் செழுங்கவி ரிலஞ்சிகண் மலிந்து. (ருய)

மாக்கவின் மிகுங்கலப மஞ்ஞைசிறை யன்னங்
கூக்குரல் செயுங்கரிய கோகில நெருங்க
மீக்குலவு மந்தியின முந்துதொறு மென்மேல்
ஆர்க்குறிமி றெங்கணு மடர்ந்திசை தொடங்க. (ருக)

வீழ்ந்தநற வத்துளி விழிப்புனல தாகச்
சூழ்ந்துமுரல் வண்டினிசை தோத்திரம தாகத்
தாழ்ந்துமல ரேந்தியிறை தன்றிருமு னின்றே
வாழ்ந்துருகு மன்பரென மன்னுமொரு பூங்கா. (ருஉ)

வாய்த்தவள மிவ்வகை வயங்குமத னுப்பன்
ஏத்தரு தவச்சினைக ளெங்கணு நெருங்க
மீத்திக ழறக்குழை தழைத்துமிளிர் மெய்ம்மை
பூத்தறிஞர் போன்றெழில் பொருந்துமொர் குருந்தம். (ருங)

ஆர்வமுடன் வந்தினை மகப்பட வளைக்கும்
பார்வையென மாந்தர்படி வங்கொடு நடந்தார்
ஏர்வருகுருந்தமொ டிலங்குமுயர் காவிற்
சேர்குவ மெனத்திரு வுளத்தருள் சிறந்து. (ருச)

வந்துதிகழ் தொண்டர்புடை சூழமகிழ் வெய்திக்
கொந்தலர் மலர்ப்பொலி குருந்தடி பொருந்தி
அந்தமுத லில்லவ ரருட்டமி ழுரைப்பார்
பந்தமறு மெல்லையது பார்த்தினி திருந்தார். (ருரு)

பொங்குபுனல் யாறுபல போய்விழு கடற்போல்
எங்குமுள நல்லுயிர்க ளெய்துமொளி யாகுந்
திங்களணி வேணியரி ருப்பவடி சேருந்
துங்கமறை யாளர்பலர் துன்றுநெறி சென்றார். (சுசு).

செம்மனத்து வாதவூர்ச் செல்வர்தமைப் புல்லாத
பொய்ம்மயக்கந் தரும்பாசம் போலமலர்ந் தனபூவை
எம்மயக்கு மொழிப்பாருக் கினிப்பிறவி யில்லையெனக்
கைம்மறிக்கு மவர்போல மலர்ந்தனவங் குளகாந்தள். (சுஎ).

விற்காட்டுங் காத்துமத னம்பாகி வெம்பிறவி
யிற்காட்டி யாவரையு மாகுலஞ்செ யெம்பாவம்
நிற்காட்டி லொழிப்பவர்யார் நீயருள்க வெமக்கென்று
பற்காட்டி நிற்பவர்போன் மலர்ந்தனமென் பனிமுல்லை. (சுஅ).

பொற்புடைய தமிழ்பாடும் புண்ணியரைப் பொருளினுமாஞ்
சிற்பரனுண் மையில்விழிக்குந் திருநயனஞ் சேர்தலினால்
நிற்பதுவாம் பிறவியிது வென்றிரங்கி நீண்மரங்கள்
கற்பனையை யுணர்ந்துமலர்க் கண்ணீர்கள் பொழிந்தனவால். (சுகூ).

முன்னைவினைப் பெருங்காடு மூடுறவைம் புலவேடர்
துன்னியலைத் திடர்செய்யுந் துன்பவழிச் செல்லாமல்
உன்னருநற் சிவஞான வுபதேசந் தமிழ்செய்வார்
இன்னவகைத் துளகான மெய்தியவந் நெறிநீங்கி. (எ௰).

வேறு.

விரிந்தகட லுக்கிடை விழுந்திட ருழந்தே
திரிந்தவர் நயந்துகரை சென்றணுகு மாபோல்
வருந்தவுழல் வித்தவினை யொத்தருள் வசத்தால்
அருந்தவர் பெருந்துறை மருங்கினி லணைந்தார். (எக).

இந்தவுல கஞ்சிவ னிருக்குமுல காகச்
சிந்தையருள் கொண்டுதிரு வாசக முரைப்பார்
பந்தமற வந்தயில் பரங்குறுக வென்றே
வந்துள பெருந்துறையின் வண்மையுரை செய்வாம். (௭௨)

மாத்தியர் குலத்தலைவர் வன்பிறவி யெவ்வந்
தீர்த்துலக வையருள் செய்யுமிட மென்றே
தோத்திர முரைத்துமிசை வந்துசுரர் சிந்தும்
பூத்திர ளுயர்ந்தவகை போன்றதலர் பூங்கா.* (௭௩)

## வேறு.

பேறறிந்து தவமுயல்வோ மென்றுபெருந் துறைநாடி
ஆறியங்கி யிளைக்குமவர்க் களிக்கவெதிர் நிற்பவர்போற்
கூறுமின்ப நிழல்செய்து குறையாத பத்தியுடன்
நீறணிந்து சோறேந்தி நின்றனதுன் றியகைதை. (௭௪)

நிலந்தனில்வந் தொருகுருந்த நீழலிலே யெவ்வுலகுங்
கலந்தபொரு ளிருந்தபடி கண்டுமனங் களிப்பெய்தித்
துலங்கியதங் கண்ணீருஞ் சொரிந்துகரங் குவித்துமுகம்
மலர்ந்தபெருந் தவர்போல மலர்ந்தனபுண் டரிகங்கள். (௭௫)

ஆன்றபயன் பிறர்நுகர வகத்தினிமை யுளதாகத்
தோன்றியநல் லறிவினர்போற் றுவன்றியெழுந் தனகன்னல்
என்றகுல மாதர்தம திறைவர்முக நாடிலவர்
வான்றகைய நிலைபோல வளைந்துவிளைந் தனசெந்நெல் (௭௬)

மூலக்கிரியுங் கருங்கூந்தன் மொய்வனமு மரணைக்
கோலப்புருவ வெஞ்சாபங் குனித்துவிழிக் கணையேவி
நிலைப்படுநற் பொருடேட நினைந்துதவ நீணெறியிற்
றலைப்படுவார் தமைவருத்துந் தன்மையினர் வயன்மாதர். (௭௭)

---

* உதிர்ந்தவகை போன்றதலர் பொங்கர்! என்றும் பாடம்.

## வேறு.

இன்னவகை மன்னிவளர் காவுமெழின் மேவுங்
கன்னல்வய லுந்திகழ்தல் கண்டுவகை கொண்டே
இன்னலுட லம்பெற வினிப்புவியில் வாரா
மன்னவர் பெருந்துறை வளம்பதியில் வந்தார். (எஅ)

மாதவர் மிகும்பதி புகுந்தூழி மருங்கே
நாதனுறை தண்டலையி னன்குபுனை தொண்டர்
ஓதுறு சிவாகம வொலிப்பொலிவு கேளா
யாதிலை தறிந்துரைமி னேவலர்க ளென்றார். (எகூ)

சென்றவர்கள் வந்துசிவ பத்தர்பலர் சூழக்
கொன்றைமுடி வைத்தகுண வெற்பைநிக ரொப்பார்
நின்றதொர் குருந்தமர நீழலி லிருந்தார்
என்றலு மகிழ்ந்தன ரினிப்பிறவி யில்லார். (அ௰)

ஏவல ருரைத்தமொழி கேட்டரனை யெய்தும்
ஆவலொடு காவினை யணைந்தக மலர்ந்து
மேவிய மணிச்சிவிகை விட்டினி திழிந்தே
தேவர்பர வும்பரமர் தெய்வசபை கண்டார். (அக)

## வேறு.

அண்டமெலாங் கடந்தபொருள் பகரு நூலி னளவுரைப்பார் தெளிந்தயர்வா ராய்வா ராகித், தொண்டுபடு மடியார்க ளூற்றொன் பானமேற் றெண்ணூற்றென் பானென்னுந் தொகுதிசூழ, ஒண்டொடிபங் கினனிருப்ப விருப்பா லெய்தி யுடனுரைத்துச் சிவஞான முணர்வா ரன்பு, மண்டியநெஞ் சினில்வணங்கி வணங்கார் போல மந்திரியார் மேன்மையுடன் வந்து நின்றார். (அஉ)

உருத்திராக் கிருமணியை யிலங்கு காதி லொண்சிரத்திற் கந்தரத்தி லொளிகொண் மார்பிற், கரத்திலணிந் திலகுதிரு முண்ட மங்கிக் கண்காந்த நன்னுதன்மேற் கவினச் சாத்தித், திருத்திகழும் வேதியனு ரம்பொன் மேனி திகழ்வதுகண் டகமகிழ்வார் செங்கை மீது, பொருத்தமுறும் புத்தகமே தையாவென்னப் பொய்ம்மை யிலாச் சிவஞான போத மென்றார். (அங)

என்றலுமே சிவமேது ஞான மேதிங் கிலங்கியிடும் போதமே தியம்பு வீரேல், அன்றுவட நீழலில்வந் திருந்தார் நீரே யடியேனு மும்மக்கடிமை யாவே னென்ன, நின்றசிவ மொன்றதனைத் தேர்தன் ஞான நிகழ்போதந் தேர்ந்ததனைத் தெளிதலாமென், றொன்றிய நற்பொருள்வினவி நிற்பார் சிந்தை யுருகும்வகை யுரைசெய்தா ருவமையில்லார். (அச)

வேறு.

உத்தம ரின்ன வாறிங் குரைத்தலு முவந்து நாலாஞ்
சத்திநி பாத மெய்துந் தன்மைய ராத லாலே
அத்திரு மன்றி லாடு மையரிங் கென்னை யாள
இத்திரு மேனி கொண்டா ரென்பது மனத்தி லெண்ணி. (அரு)

மின்னினு நிலைமை யில்லா விழுப்பொருள் யாவும் வேண்டேன்
உன்னடி யணைந்து நாயே னுறுபவ மொழித்தல் வேண்டும்
என்னையின் றடிமைக் கொள்வா யெம்முயிர்க் கிறைவா வென்று
முன்னுற வணங்கி நின்றார் முகமெலாங் கண்ணீர் வார. (அசு)

இவ்வகை புகன்று முன்னோன் முன்னுற விரங்கி நிற்பத்
திவ்விய தரமேயான செய்திய ரென்று நாடி
அவ்வடி யவரின் மிக்கா ரொருவரிவ் வடிமை தன்னை
வெவ்வினை யகற்றி யாள வேண்டுமென் றிறைஞ்சி நின்றார். (ருக)

கருப்புக நினையார் தம்மேற் கண்ணருள் செய்து நெஞ்சிற்
பரப்பற மிதித்தல்வேண்டி யெடுத்தபொற் பாதங் கொண்டு
திருப்புனை மறையோர் போற்றுந் தில்லையம் பலத்தே நின்ற
அருட்பரா னந்த வாரி யாதலி னதற்கி சைந்தார். (சo)

அத்தகு பகலோன் முன்ன ரலர்செயு மம்பு சாதம்
ஒத்தவர் தம்மை நாடி யுன்னையின் றடிமைக் கொள்ள
இத்தலத் தணைந்தோ நீமுன் னியற்றிய தவத்தி னாலே
சித்தம திரங்கல் வேண்டா மெனத்திரு வாய்ம லர்ந்தார். (அக)

வந்துநான் வறுமை யுற்றேன் மாற்றென திலம்பா டென்று
சிந்தையா குலமுற் றோன்கைச் செழும்பொரு ளீதல் செய்வார்க்
கிந்தநா ளளிக்க வேண்டு மெனவிதி யின்மை யாலே
அந்தநாளிந்நா ளாக வடிமைக்கொண் டருள வெண்ணி (கூ0)

அத்தகு தொண்டர்க் கெல்லா மதிபரா மவரை நோக்கி
இத்தவ முடையோ னெய்து மிடரொழித் தாழ்வ திந்நாள்
வித்தக விதற்கு வேண்டுங் கருமநீ விரைவிற் செய்கென்
றுத்தம வடிவங் காட்டு முண்மையா ருரைத்தல் செய்தார். (கூக)

முன்னவர் புகன்ற வாறு முயல்குவ மென்றே யந்த
மன்னுறு தவத்தின் மிக்கார் வகைமலர்த் தெரிய லாலும்
பொன்னிடை யழுத்தி முத்தம் புனைந்தபல் பட்டி னாலும்
அந்நெடுங் காவி னூடங் கானபூங் கோயில் செய்தே. (கூ௨)

செய்தநற் கோயி லூடு சிறந்தவா சனமுஞ் சேர்த்து
மெய்தகு தொண்டர்க் கெல்லா மிக்கவ ரிறைவற் சார்ந்து
கைதவ முடையார் நெஞ்சிற் கனவிலுங் காண கில்லா
மைதரு களத்தாய் கோட்டஞ் சமைந்தது வாய்ப்ப வென்றார். (கூரு)

ஆயிடைக் குடபால் வெற்பி லாதவன் கரந்து ஞாலம்
பாயிருள் பரந்த பின்னர்க் கடிகையோர் பதினைந் தாகி
மேயநல் லுயிர்க ளெல்லாம் விழித்துயில் பயிலுங் காலைத்
தூயதொண் டர்க்கு மாயை தொலையுநல் லமயந் தோன்ற. (கூச)

இங்கிவன் றன்னை யாளுங் காலமீ தென்று தெய்வச்
சங்கம தகன்று முன்னோன் மஞ்சனச் சாலை சார்ந்து
குங்குமம் புழுகு சாந்தங் குழைத்துமெய்ம் முழுதும் பூசிக்
கங்கையி னன்னீர் வாசங் கலந்தமென் பனிநீ ராடி. (கூரு)

மெய்ப்புன றுகிலான் மாற்றி விலைமதிப் பில்லா நல்ல
ஒப்பருஞ் செம்பட் டாடை யுடுத்துயர் கோட்ட மெய்திச்
செப்பிள முலையாள் பாகன் றென்றிசை யதனை நோக்கி
அப்பெருந் தவிசின் மேலங் கழகுற விருந்த பின்னர். (௧௬)

அண்டரு மலர்தூ யேத்து மன்பருந் தூநீ ராடி
வெண்டுகில் புனைந்து நீறு விளங்கிய மெய்ய ராகி
முண்டக மலர்த்தாள் வைத்து முத்திதந் தருள மேனி
கொண்டவர் திருமுன் சென்று குறுகியங் குவகை கூர்ந்து. (௧௭)

விண்ணவ ரதிபன் பொற்றாள் விளக்கியர்ச் சனைமுன் செய்து
தண்ணறும் பனிநீர் தோய்ந்த சாந்தமெய்ம் முழுதுஞ் சாத்தி
வண்ணமென் கழுநீர் மாலை வளம்பெற வணிந்து பின்னர்க்
கண்ணுறு பரிவு தீரக் கண்டுள மகிழ்ச்சி கொண்டு. (௧அ)

பருப்புட னுளி கோரப் பழச்செழுந் துருவல் சேர்த்துச்
சருக்கரை கலந்து பாலிற் சமைத்தநல் லமுது தன்னை
இருத்திய கனகக் கான்மே லிலங்குபொற் கலத்தின் மீதே
விருப்பொடு படைத்து நெய்யு மிக்கமுக் கனியும் பெய்து. (௧௯)

மாலயன் வலாரி மற்றை வானவர் பிழைக்க முன்னாள்
ஆலமுண் டவனே நல்ல வமுதமுண் டருளா யென்று
சீலமா மகிழ்ச்சி பொங்குஞ் சிந்தையி னுரைப்பக் கால
சாலனு முண்டு நீராற் கரமலர் கழீஇய பின்னர். (௨௰)

வெள்ளிலை பழுக்காய் நல்கி விரைதரு தூபந் தீபங்
கொள்ளுநற் றீபங் காட்டிக் கோலநன் னீறு சாத்தித்
தெள்ளொளி விளங்கு மாடி திருந்தமுன் திகழ்வித் தெங்கும்
உள்ளவர் முடிமே லோங்க வொண்குடை கவித்தல் செய்து. (௨௰௧)

கற்றைவெண் கவரி செம்பொற் காம்புநீ ளால வட்டம்
பற்றியன் புடனே வீசிப் பரிவுட னடியார் சூழப்
பொற்றவி சிடையே மேவும் புண்ணியன் றிருமுன் பைம்போ
துற்றகை யுடனே வாத வூரரங் கிருந்த பின்னர். (௨௰௨)

மந்திரம் பதங்கள் வன்னம் புவனங்க டத்து வங்கள்
ஐந்துநற் கலைகளென்னு மறுவகை யகற்றி யந்தச்
சிந்தனைக் கரிய மேலைச் சிவத்துட னறிவு சேரப்
பந்தனை யொழிவார் தம்மேற் பரிந்தருட் பார்வை செய்து. (௯௩)

எவர்க்குமெய்ஞ் ஞான மாமஞ் செழுத்தையு முணர்த்த வேண்டி
அவத்தொழி லகற்றி யாளுஞ் சிவத்தைமுன் னாக மாறித்
தவப்பெரு வடிவங் கொண்டார் தண்டமிழ்ப் பாடு மன்பர்
செவிப்புலன் வழியே சிந்தை யுறத்திரு வாய்மலர்ந்தார். (௯௪)

வேறு.

விரவு மன்பொரு வடிவுகொண் டணைவார் விழித்த பார்வையின் விளக்கின்முன் னிருள்போற், சுருதி செந்தமி ழாக்கிய மொழியார் தொலைவி லாதவெந் துயர்ப்பவ மொழிந்து, பரவி மென்பதம் பணிபவர் படிமேற் படிய வீழ்ந்தனர் வாழ்ந்தனர் பரிவான், மருவு மிங்கிவர் சென்னியி லிருதாண் மகிழ வைத்தனர் மதிநதி முடிப்பார். (௯௫)

மன்னு முன்னுள வுயிர்க்கர ணங்கண் மாய்ந்து பொய்புத லறிவிழந் தருளாற், றுன்னு மின்னருட் சிவகர ணங்க டோன்றலாற்சுக வறிவதிற் றோன்றச், சென்னி யின்மிசை மேவிய பாதந் திருந்து கண்ணிணை சேர்த்திரு கரத்தால், உன்னல் செய்திடு மிதயமே லணைவித் துவகை கூர்ந்துமெய் யுணர்ச்சியி னெழுந்தார். ()

மேலை யத்தலத் திந்திர னிமையோர் மீதெ லாம்பொழி விரைமலர் மழையே, போல வித்தலம் புதையவந் துதிரப் பூதருங்கண நாதரும் புகழச், சால நற்குணம் புனையுநல் லடியார் தங்கள் செங்கையி லொலியலுந் தயங்கும், ஆல வட்டமுங் கவரியு மிருபாலசைய மாமுனிக் கணமடி வணங்க. (௯௭)

இருந்த வப்பெருங் கருணைய னெதிரே யெய்தி யன்புடை யியல்பின ரிறைஞ்சிச், சிரந்த னிற்றம திருகரங் குவியச் சிறந்த பேரரு ணிறைந்தசெய் கையராய், வருந்தி யித்தல மகழ்ந்துமேற் பறந்து மால யன்றொழ வரியநீ யடியேன், அருந்து யர்ப்பவ மகற் றவிங் குருவ மாவ தேயென வழுதுநெஞ் சழிந்தார். (௱அ)

ஐய னேயெனை யாண்டருள் புரியு மாதி யேயுமை யணிமழு விருக்குங், கைய னேகொடுங் காலனை முனியுங் கால னேயிரு கண்ணினுண் மணியே, செய்ய னேயடி போற்றியென் பெரிய செல்வ மேயடி போற்றிபொய் யினர்தம், பொய்யனேயடி போற்றி யெவ் வுயிர்க்கும் போத மேயடி போற்றியென் றழுதார். (௱கூ)

அற்றை ஞான்றிருள் வைகறை யெனும்போ தனைத லும்பர னருட்குரு வடிவந், துற்ற சாந்துடன் முயங்குசெங் கழுநீர்த் தொடைய லின்சுமை பொறுதெனத் துளங்கிக், கற்று மான்கரத் தேந்திய விறைவன் கவின்கொண் மார்பணி மலர்த்தொடை கழித் தங், குற்ற வான்றுய ரகன்றுநல் லடியா ருடன்விளங்கினர் களங்க மொன் றில்லார். (௱௰)

வாத வூருறை யிறைவர்தம் பெரிய மாயை போலிருண் மாய்ந்துபின் னவர்பாற், போத மாகவந் துறுசுடர் விளக்கம் போல வெய்யவன் புணரியிற் றோன்ற, வேத நாதர்த மிருபத மிறைஞ்சு மேன்மை யாளரை வேறுகொண் டிருந்தங், கோது மாகமத் தறி வரும் பொருளை யுரைக்க வேநினைந் தாரற முனைந்தார். (௱௰க)

களிம்பு தோய்ந்தசெம் பெனவுனை மருவுங் கருமை கூர்மலங் கண்டது கலக்கும், பளிங்கு போன்றதுன் றன்மையம் மலத்தின் பற்றி னுலுடல் பலவெடுத் துழன்றாய், வளங்கு லாம்புவ னந் தொறுஞ் செயுமுன் வல்வி னைப்பயன் வருமுறை நெறியே, அளந்து நாந்தா நுகர்ந்துமே னுகர்வு மாக்கி யேதிரிந் தனைமன வழுக்கால். (௱௰உ)

செய்து ளோர்பெறும் வினைப்பய னொருவர் சேர்க்க வேண்டுவ தில்லெனி னிதுமேல், எய்து மேலிது நுகர்வதென் றறிவதில்லை நீவினை யெனிற்சட மறியா, துய்த லாகிய நன்னெறி யுணரா வினையு முன்வினைப் பயனையு முணர்ந்து, மைத வாமல மொழித்தரு ளகலா வாழ்வு நல்குவம் யாமென மதிப்பாய். (௱௰௩)

எவர்க்கு மிம்மலஞ் சேரவிங் கொழியா திருப்ப தென்னெனி லின்னல்கொள் பிறவித், துவக்கெ னுந்தம திருவினைப் பயனுந் துலைபு கும்பொரு ளெனநிறை நிகர்த்தால், அவர்க்கு நம்பதங் கொடுத்திட ரொழிப்போ மதுவி லாதவ ரழுங்கியவ்வளவும், பவப் பெருங்கடல் வீழ்வர்தம் பருவம் பார்க்கு மெம்மையுந் தம்மையும் பாரார். (௱௰௪)

என்று கூடுமப் பருவமென் றியம்பில் யாமி ருந்துள விடந் தொறு மிறைஞ்சி, நன்றி சேர்சிவ புண்ணியம் புரியு நன்மை யாலது நணுகுமென் றறிநீ, மன்றி லானவெம் மியல்புனக் குரைக்கின் மாசி லாவுரு மூன்றவற் றருவம், ஒன்று பேரொளி யொன்றரு வுருவ மொன்று தானரு வுருவ மென் றுணர்வாய். (௱௰௫)

இந்த மூன்றினி லுருவுனக் கறிய விசைந்த பேரரு ளியம்புமிவ் வுருவம், வந்தி யாவரும் பணிவதற் கெளிதாய் வரமெலாந்தர வருமரு வுருவம், பந்த மாகிய மலவிரு ளகற்றும் பரிதியாவுள பல்லுயிர்க் குயிராய், அந்த மாதிக ளளப்பரு மொளியா யமல மாகுமவ் வருவெனு முருவம். (௱௰௬)

சரியை.

ஆவ லாலெமக் காமலர் மரங்க ளாக்க லம்மலர் பறித்தலம் மலராற், றுவி லாவகை தார்பல சமைத்த றணப்பி லெம்புகழ் சாற்றலன் புடனு, மேவு மாலய மலகிடன் மெழுகல் விளங்க நல்விளக் கிடுதலெம் மடியார்க், கேவ லானவை செய்தலிச் சரியை யியற்ற வல்லவர்க் கெம்முல களிப்போம். (௱௰௭)

## கிரியை.

சந்த வர்க்கமுங் கிளர்மணப் புகையுங் கவின்கொ டீபமும் புனிதமஞ் சனமும், கொந்த விழ்ந்தன் மலருமற் றுளவுங்கொண்டு மாயையின் குணங்களொன் றிலராய், ஐந்து சுத்திசெய் தகம்புற மிறைஞ்சி யங்கி யின்கடன் முடித்தருள் வழிநின், றிந்த நற்பெருங் கிரியையன் புடனே யியற்ற வல்லவ ரெம்மரு கிருப்பார். (௱௰அ)

## யோகம்.

முக்கு ணம்புல னைந்துட னடக்கி மூல வாயுவை யெழுப்பிரு வழியைச், சிக்கெ னும்படி யடைத்தொரு வழியைத் திறந்து தாண் டவச் சிலம்பொலி யுடன்போய்த், தக்க வஞ்செழுத் தோரெழுத் துருவாந் தன்மை கண்டரு டரும்பெரு வெளிக்கே, புக்க முந்தின ரெமதுருப் பெறுவார் புவியில் வேட்டுவ னெடுத்தமென் புழுப் போல். (௱௰௯)

## ஞானம்.

பரந்த வான்கலை முழுதுமா கமநூற் பகுதி யும்பல சமயசாத் திரமுந், தெரிந்து தேர்ந்ததில் வாய்ந்தமுப் பொருளின் செய்தி யேபொரு ளெனமனந் தெளிந்து, புரிந்து போந்துள சிற்றறி வனைத்தும் போக்கி யவ்வறி வெனச்சிவ போதம், விரிந்து தோன் றுநெஞ் சுடையவித் தகரே மேன்மை யானநம் மெய்ப்பதம் பெறு வார். (௱௨௰)

உருப்பொ லாதவ ரிழிகுலத் தவர்நல் லொழுக்க மில்லவ ரொன்றுநம் மளவில், விருப்பி லாதவ ரெனினுமெய்ந் நீறு மிக்க சாதன வேடமுங் கண்டாற், றரிப்பி லாதுசென் றெதிருற வணங் கித் தக்க போனக மளித்தவர்க் கெளிதாய், இருப்பர் தாமவ ரடிய வர்க் கடியா ரென்பர் யானென தெனுஞ்செருக் கறுப்பார். (௱௨௧)

விரிந்த சஞ்சித வினைகளன் புடனும் விழிக்க வெந்தன விரவு மிப் பிறப்பிற், பொருந்தும் வல்வினை யுடலுட னகலும் புந்தி சேரருள் வருவினை போக்கும், அருந்து யர்ப்பொரு ளுயிருடன் புனவே யல்ல நம்மன வாகுமிங் குனைப்போல், இருந்த நங்குரு வடிவைநின் கருத்தி லிருத்து வாய்பொரு ளிதுவென மொழிந் தார். (௱உஉ)

அத்த னார்திரு வாய்மலர்ந் தருளு மமல வாசகங் கேட்டக மகிழும், பத்த னார்தமக் கெழுபிறப் பறுக்கும் பாத மீதுறப் பணிந் தெதி ரெழுந்து, பித்த னனவென் பிழைதனக் கிரங்கும் பிஞ்ஞ காமிகப் பேதைமை யுடையேன், முத்த னுகமெய் காட்டினை யெனவே மொழிந்த ழிந்துகைம் முடிமிசைக் குவித்தார். (௱உ௩)

என்ன வாகமுன் னினைந்துள பொருளு மில்ல தாகிய வுடல மும் யானு, நின்ன வாகநின் னருள்கொடு நினைந்தே னின்ம லாவென நின்றுநின் றனையா, மன்னு தானைதம் மேலணி கலன்கண் மதுரைமீனவன் வான்பொரு ளிறையோன், முன்ன தாக வைத் திறைஞ்சின ரறஞ்சேர் முதல்வ னார்முக மலர்வுகொண் டிருந்தார். (௱உ௪)

## வேறு.

பெருந்துறை யுறைவா ரன்பு பெறுந்திரு வடிய ராகி
இருந்தவர் தம்மின் மேன்மை யெய்தினர் முகத்தை நோக்கித்
திருந்திய பொருளீ தெல்லாந் திருப்பணிக் களியு மேலாம்
அருந்தவர்க் குதவு மில்லா தலந்தவர்க் கருளு மென்றார். (௱உ௫)

தம்பெரு முதல்வர் சொல்லுந் தருமொழிப் படியே யுள்ள
செம்பொருள் யாவு மன்பின் றிறத்துளார் தொலைத்த பின்னர்
அம்பர னளித்த ஞான மருந்தினை யருந்திப் பாச
வெம்பிணி யகற்று மந்த வித்தகர் முத்த ரானார். (௱உ௬)

திருத்திகழ் கவிகைக் கீழுஞ் சிறந்தபொற் சிவிகை மேலும்
வரத்திரு மேவு தானை மன்னவ னென்ன வந்தார்
உருத்தெரி யாத நீறுங் கோவண வுடையுங் குஞ்சி
விரித்துள சிரமுந் தூநீர் மிகப்பொழி விழியு மானார். (ளஉஎ)

அன்புட னேக்கி நிற்ப ரழுவர்கை தொழுவர் வீழ்வர்
இன்புற வெழுவர் பின்பா லேகுவ ரிரங்கி மீள்வர்
நன்பகல் கங்குல் காணார் ஞானநல் வடிவே கண்டு
கொன்புனை பித்தர் பாலர் பிசாசர்தங் கொள்கை யானார். (ளஉஅ)

மன்னுமிந் நிலைமை யுற்றார் வன்படைச் சுற்ற மாகித்
துன்னின ரெல்லாம் வந்து தோன்றலைத் தொழுது நின்று
தென்னவன் முனியா வண்ணஞ் செழும்பரித்திரள்கொண்டேகல்
என்னும தொன்றுந் தோரா திதுபழு தென்றி ரங்கி. (ளஉகூ)

ஐயநீ வருதல் வேண்டு மென்றவ ரழைத்த போதிற்
றெய்வநீ றணிவார் தானைத் திறத்தினர் தம்மை நோக்கி
மையலா முணர்வின் மிக்கீர் யாவர்நீர் மாயா பேதப்
பொய்யெலா முரைத்தல் வேண்டாம் போமினி யகல வென்றார்.

என்னிவர் புகலவ தென்றே யாவரு நின்றி ரங்கித்
துன்னுநற் றானை வீரர் தம்முளே துயர மெய்திப்
பன்னுநம் மொழியுங் கேளார் பரிவில ரென்று நீங்கித்
தென்னவற் கின்ன வாறு செப்புவ மென்று சென்றார். (ளகூக)

சென்றவர் வைகை நாடன் றிருந்தவை முன்ன ரெய்தி
வன்றிறன் மன்ன போற்றி மாமது ரேச போற்றி
என்றுபின் வாத வூர ரெய்திய செய்தி யெல்லாம்
ஒன்றிய கவற்சி கூரு முளத்துட னின்று சொல்வார். (ளகூஉ)

நின்பெயர் புனைந்தோ ராகி நின்பெருங் கருமஞ் செய்வார்
என்பவர் செய்கை தன்னை யெங்ஙனம் யாங்கள் சொல்வோம்
பொன்பொலி மௌலி யோய்நின் புடைவிடை கொண்டுபோந்து
மன்பெருந் துறையா மந்த வளநகர் புகுந்த பின்னர். (ளகூகூ)

அந்நகர் மருங்கோர் காவி லணைந்துள குருந்தி லீசன்
றன்னடி யார்க ளாகுந் தாபதர் பலருஞ் சூழ
மன்னியங் கொருவர் மேலா மாதவ வேடம் பூண்டு
முன்னுற விருத்தல் கண்டு முடிவிலா மகிழ்ச்சி கொண்டு. (ராஙச)

அங்கவர் தாமுந் தாமு மன்பொடு சில்சொற் கூறிச்
சங்கர சிவனே போற்றி யென்றவர் தாளில் வீழ்ந்து
செங்கரங் குவித்துச் சென்னி சேர்த்துவந் தனைகள் செய்து
பொங்கொளி மணிப்பூணுடை பொருளெலா முவந்து நல்கி. ()

குறைவிலா வாடை நீத்துக் கோவண முடுத்துச் சென்னி
நறைமயிர் விரித்து நீறு மெய்யெலா நயந்து பூசி
மறைமையன் றிவைதா மென்று மொழிந்தவெம் முகமும் பாரார்
நிறையழி பித்த ராஞர் நிருபவென் றிறைஞ்சி நின்றூர். (ராஙசு)

கேட்டலு மதுரை மாறன் கிளர்ந்துமெய்ம் முழுதும் வேர்வு
காட்டிட வெகுளி பொங்கக் கண்கனல் வடிவ மாகி
வாட்டிறன் மன்னர்க் கின்ன வண்மைய ருளரேல் வையம்
நட்டுறு செல்வந் தானே யவையில வென்று நக்கான். (ராஙஎ)

அடுபரி கொள்வா னீந்த வரும்பொருள் கவர்வ தாகக்
கெடுமதி யுரைப்பார் தஞ்சொற் கேட்டுமா லெய்தி ஞனைக்
கொடுமைகொ ளிந்த வோலை கொடுத்தொரு தினத்து நம்பாற்
கடுநடைத் தூத ரேகிக் கைக்கொடு வம்மி னென்றூன். (ராஙஅ)

ஏவலிற் சென்ற தூத ரெழிற்பெருந் துறையி லெய்தி
ஆவலிற் சிவன்று ளேத்து மண்ணலைக் கண்டி றைஞ்சி
மேவலர்க் குருமே றன்ன வெந்தொழில் வேந்தன் வாய்மைக்
காவலர்க் கதிபன் மாறன் றிருமுகங் காண்க வென்றூர். (ராஙக)

அற்றமில் கொள்கை மிக்கா ரரன்றிரு முகம தன்றி
மற்றொரு முகமுங் காண மனமில ரிதன்மே லன்பு
பற்றிலர் பிறிதோ ரோலை படியெடுத் துரைமி னென்ன
உற்றத னியல்பு வல்லா னெழுதிய துவந்து சொல்வான். (ராசய)

தென்னவ னெழுது மோலை தென்னவன் பிரம ராயன்
என்னுநல் லமைச்சர் காண்க வெல்லையி றனங்கொண் டேகிக்
கொன்னுறு பரிகொ ளாமற் கோவணங் கொண்டீ ரீது
மன்னவர் கருமஞ் செய்வார் வண்மையென் றுவகை யுற்றேம்.

வையக மன்ன ராகி வாழ்தலின் மனைக டோறும்
எய்திய வுதரத் தீயா லிரப்பது பெருமை யென்றும்
மெய்தகத் தம்மை யாண்ட வேந்தரைப் பிழைத்து வேறு
செய்வது பலிக்கு மென்றுந் தேர்ந்தநூற் றுணிவுங் கண்டேம்.

மன்னரை யடைந்து வாழ்தல் வஞ்சநஞ் சுமிழு நாகந்
தன்னுடன் மருவி வாழுந் தன்மையென் றுணர்தி ராயிற்
றன்னும்மிவ் வோலை காணும் பொழுதுநந் தூத ரோடும்
இந்நகர் வருக மாற னெழுத்தென வுரைத்து நின்றான். (௱௪௩)

மீனவ னெழுது மோலை கேட்டபின் மின்பா லன்பர்
ஆனவ ரடியா ரெம்மை யடிமையா வுடைய ரல்லாற் [றும்
றானெனக் கண்ண னென்றுந் தன்னையான் பிழைத்தே னென்
மாநில மன்னன் சொன்ன தென்னென மனத்தி லெண்ணி. ( )

அந்தக னெழுது மோலை கொண்டவன் றூதர் தாமும்
வந்தெமை யணுக மாட்டா ருடையவர் மதுரை யாலே
வெந்தொரு கணத்தில் வீழ மேவலர் புரங்கள் செற்றார்
தந்தம ரொருவர்க் கஞ்சத் தகுவரோ வென்று சாற்றி. (௱௪௫)

போயரன் றிருத்தா ளேத்திப் புண்ணிய வடிவே போற்றி
ஆயிரஞ் சுடிகைப் பாம்பை யலரென முடித்தாய் போற்றி
மாயிரு ஞாலங் காக்கு மன்னவ னெழுது மோலைப்
பாயிர மிதுகே ளென்று மொழிந்தனர் பழுதி லாதார். (௱௪௬)

கேடிலா வியல்பி னருங் கேட்டிள முறுவல் பூத்துப்
பாடலா லேத்துந் தெய்வப் பான்மையர்க் குவந்து சொல்வார்
பீடிலா தவர்போ லுள்ளம் பேதுற லொழிவா யிந்த
நாடெலா மதிக்க நாமே நற்பரித் திரள்கொண் டேகி. (௱௪௭)

தென்னவற் களித்து மீள்வோஞ் செழுந்திறற் றூத ரோடு
மன்னனைக் குறுகி யென்பால் வரவிடு மோலை தன்னான்
முன்னுறக் கடிது வந்தே ளுவனைத் திங்கண் மூலம்
என்னுமத் தினத்தி லிங்கே யெய்துநற் பரிக ளென்பாய். (௱சஅ)

தொன்மதிக் குலத்து மன்னன் றுயர்செய்வா னென்று சற்றும்
நின்மனங் கவற்சி கொள்ளா தொழிகென நீறு சாத்திப்
பொன்மணிக் கலன்க ணல்கிப் பூந்துகில் பிறவுந் தந்து
மன்மனத் துவகை கூர மந்திரிப் பான்மை செய்து. (௱சக)

தென்றிசைக் கதிபன் றன்பாற் சென்றிது கொடுத்துக் காண்டி
என்றுநன் மணியு நல்கி யேகென விடுத்த பின்னர்க்
கன்றகல் புனிற்றா வென்னக் கசிந்திரு கண்ணீர் வார
நின்றுநின் றிறைஞ்சி யையா நீத்தியோ வென்று நொந்து. (௱நூ)

விழிப்புனல் சிந்தச் சிந்த விண்ணவன் விடைபெற் றேகிச்
சுழிப்புனல் வாவி சோலை சூழ்பெருந் துறையை நீங்கி
வழிக்குறு துணையா யுள்ள வள்ளலைத் தொழுத்து மோதிப்
பழிச்சுறு தூத ரோடு மதுரையம் பதியிற் போனார். (௱நூக)

மதுரைமன் னவன்முன் னேகி மனமிலா வணக்கஞ் செய்து
கதிர்மதிச் சடையோ னீந்த கவின்கொண்மா மணிமு னல்கி
எதிருற நின்ற போதி லின்புற வழுதி நோக்கி
விதிமுறை யிருமிங் கென்ன விருந்தனர் விரிந்த நூலார். (௱நூஉ)

விலைமதிப் பில்லா வந்த மேதகு மணியைப் பல்கால்
நிலையுற வியந்து நோக்கி நெஞ்சினு ளுவகை யெய்தித்
தலைவனைச் சிந்தை யுள்ளே தரிப்பவர் தம்மை நாடிச்
சிலைமுகக் கரத்து மன்னன் செய்ததே துரைமி னென்றான். (௱நூஙு)

மலக்கொடும் பகையை வெல்வார் மன்னவன் முகத்தை நோக்கி
நிலத்தொளிர் புகழின் மிக்காய் நீதரு நிதிகொண் டேகி
இலக்கணக் குறைபா டின்றி யீரிரு கதியு முண்டாங்
குலப்பரி யினங்கள் யாவும் விலைக்குறக் கொண்ட பின்னர். (௱நூச)

அரும்பரித் தொகுதி யெல்லா மணிதிகழ் மதுரைக் கேகப்
பொருந்திய தினமே தென்னப் பூசுரர் விதியிற் றேர்ந்து
திருந்துமா வணியாந் திங்கண் மூலநற் றினமா மென்ன
இருந்தன னதனை நாடிப் பெருந்துறை யென்னு மூரில். (௩௫௫)

நின்படைச் சுற்ற மெல்லா நீடுமிந் நகருக் கெய்தும்
அன்பினிற் கடிது மீண்டா ரவர்பெரும் படிறு கூற
மன்பெரு முனிவா லோலை வரைந்தனை யதனால் வந்தேன்
கொன்பரித் திரளிங் கெய்துங் கூறுமந் நாளி லென்றார். (௩௫௬)

என்பது கேட்டு மாற னும்மிடை யெமக்குண் டான
மன்பெரு நண்பு நீக்க நினைத்துள மனத்தர் சொல்லால்
அன்பிலர் போல வோலை யெழுதின மதுகொண் டின்னே
துன்புற லொழிவீ ரென்று நன்மையாத் தொன்மை கூறி. (௩௫௭)

கொன்னெடுங் கோயி லூடு கொடுபுகுந் துரிமை கூரத்
தன்னரு கிருத்தி மேன்மை தக்கநற் கலைக ணல்கிப்
பொன்னணி கலன்கள் யாவும் புனையுமென் றளித்து முன்போன்
மன்னுள கருமங் கூறி மனையிடை யேகு மென்றான். (௩௫௮)

தம்பெரு மனையிற் சென்று தாபதர் வைகப் பின்னர்
நன்பரிச் சமூக மெய்து நாளிரண் டென்னு முன்னர்
வெம்படைச் சுற்ற நீங்கி யிருந்துழி விரிந்த சேமி
அம்புவிக் கரசன் றன்மு னமைச்சரி லொருவன் சென்று. (௩௫௯)

போற்றியெம் பொருநை நாட போற்றியென் றிறைஞ்சிக் கூறு
மாற்றமுண் டொன்று நின்பேர் புனைந்துள வரிசை பெற்றோர்
சாற்றருந் துரகங் கொள்ள நேரியன் றலத்திற் சார்ந்து
நீற்றின னடியார் கையி னின்பொருள் யாவு மீந்தார். (௩௬௰)

நின்பெருந் தூத ரேகி யெழுதுகின் றோலை காட்டப்
பின்புவந் தனது சீற்ற மொழித்துயிர் பிழைக்க வெண்ணி
அன்புடை யவர்போ லுன்ற னடியிணை குறுகிப் பின்னர்
நன்பரித் திரளிங் கெய்து நாளுனக் களிப்ப லென்றார். (௩௬௧)

மற்றவர் மொழிந்த வெல்லாம் பொய்யுரை மன்ன வென்னச்
சொற்றமிழ் வைகை நாடன் றூதரை வெருவ நோக்கி
அற்றமில் சுருதி வல்லா ரருட்பெருந் துறையி லெய்தி
உற்றவெம் பரிக ளுண்டே லொல்லைவந் துரைமி னென்றான். ( )

அருந்திறற் றூத ரேகி யத்தினங் கடிது மீண்டு
வருந்திமுன் புகுந்து மன்னர் மன்னனை வணங்கி நின்று
பெருந்துறை யென்னு மூரும் பிறிதுள பதியுந் தேடிக்
கருந்தடங் களிற்று வேந்த கண்டிலம் பரிக ளென்றார். (௱௬௩)

பாங்குநின் றின்ன வாறு பகர்தலும் வெகுட்சி யெய்தி
ஈங்குநங் கருமஞ் செய்வ னென்றிடர் செய்வான் றன்னைத்
தாங்கருந் துயரஞ் செய்து தகைந்துநந் தனத்தை யெல்லாம்
வாங்குமின் றண்ட லாள ரென்றிகன் மன்னன் சொன்னான். ( )

மன்பெருந் தண்ட லாளர் மறையவர் குலத்தின் மிக்கார்
முன்புசென் றினைய சொல்வார் முனிவுடை முகத்த ராகி
நன்பரித் தொகுதி கொள்ள நயந்துமக் கந்நா ளீந்த
தன்பொரு ளெல்லாம் வாங்கச் சாற்றினன் சீற்ற மன்னன். (௱௬௫)

மற்றிதன் பயன்யா தென்னின் மன்னவன் விடுப்ப வென்றி
உற்றவன் றூதர் வல்லை யொண்பெருந் துறையி லெய்திக்
கொற்றவெம் பரிகள் காணார் மீண்டனர் கோவு நும்பாற்
பற்றிய நேசம் விட்டான் பாரினி யாள வொட்டான். (௱௬௬)

தனமினித் தருதல் வேண்டு மென்றுவன் றண்ட லாளர்
சினமுடன் புகல வாளா விருத்தலுந் தீமை கூரும்
நினைவுட னமைச்சர் வாழ்வி னீக்கிமெய் வாக்கின் மன்னர்
தனியுற வலிதிற் காவற் சாலையி லாக்கி னார்கள். (௱௬௭)

சற்றுமுட் டளர்வி லாத தன்மையின் வாத வூரர்
மற்றவர் செலுத்தச் சென்று வன்சிறைச் சாலை யெய்த
நற்றவர் வருத்தங் காண நாணமுற் றொளிப்பான் போன்று
பொற்றடந் தேரின் வெய்யோன் போய்க்குட பான்ம றைந்தான்.

கள்ளுலா மிதழி மாலை கவின்பெற முடிந்த வேணி
வள்ளலா ரேவச் சென்று வழுதிமேல் வெகுட்சி கொண்டு
வெள்ளைவான் பிறைப்பற் றேன்ற விழுங்கவங் காந்த பேயின்
கொள்ளிவா யனைய வண்ணங் கொண்டது செக்கர் வானம். (௱௬௯)

தெண்டிரை யுலகி னன்மைத் திறத்தினர்க் குற்ற தீங்கு
கண்டுள சிறியோர் போல நகைத்தன கவின்கொண் முல்லை
ஒண்டமிழ் வாத வூரர்க் குற்றதை யுணர்ந்து துன்பங்
கொண்டவ ரிதயம் போலக் குவிந்தன கமல மெல்லாம். (௱௭௰)

தென்னவன் வைத்த காவற் சிறையினி லுறையுந் தெய்வம்
அன்னவ ரொருவர் காவனி ஞணமுற் றயர்வா ரென்றே
இன்னல்கொண் மனத்தர் போல விருட்கரங் கொண்டு கூடற்
பொன்னக ருள்ளார் கண்கள் புதைத்தனள் கங்குன் மங்கை. ()

மன்பகை துரப்ப நிந்த மந்திரித் தலைவர்க் குண்டாம்
என்பது முளதோ வந்தோ வென்செய்து மென்றி ரங்கி
அன்பரை யகன்று நெஞ்சா லழலெழ வுயிர்த்து மாழ்குந்
துன்புடை மடவார் போலத் துயின்றிலர் மதுரை யுள்ளார். (௱௭௨)

செம்மனப் புனிதர்க் குண்டாந் தீங்குதங் கிழமை யாலே
ஐம்முகக் கடவு ளீன்ற வறுமுகற் குரைக்கு மாபோல்
விம்முசெஞ் சூட்டு முட்டாள் வியன்சிறைச் சேவ லெல்லாந்
தம்மனை யிடங்க டோறுந் தழங்கின புலரிக் காலை. (௱௭௩)

சிற்பர முணர்ந்து ஞானச் செந்தமி ழோது நீதிப்
பொற்பினை யுடையோ ரின்னல் பொறாதுசென் றுரைப்பபோல
விற்பொலி சடிலன் சூல வேலவ னுல வாயில்
அற்புதன் கோயின் முன்றி லார்த்தன சங்கமெங்கும். (௱௭௪)

எம்மிறை பரியி லேறு நாளிதோ வென்று பார்க்குஞ்
செம்மலர் மடவா ளிட்ட திலகசிந் தூரம் போல
அம்மலை மிசையே வைகி யாடகக் கிரிசூழ் போந்து
மைம்மிகு கடன்மேல் வந்து முளைத்தது வால பானு. (௱௭௫)

மண்கெழு செங்கோல் வேந்தன் வைகறை யெழுந்து நீராற்
கண்கழல் விளக்கி மூழ்கிக் கண்ணுதல் பூசை செய்து
தண்கதிர் முத்த மாலை தரித்துநற் கலன்க டாங்கி
விண்கிளர் செம்பொற் கோயின் முகப்பினில் வீற்றி ருந்தான். ( )

வன்றிற லாள ரெல்லாம் வாம்பரித் திரள்கள் கொள்வான்
சென்றர னடியார்க் கீந்த செம்பொரு டாரீ ராகில்
இன்றுமை வருத்தஞ் செய்து மென்றெறி வெயிலி னூடு
நின்றிடு மென்ன நின்றார் நீள்பெரும் புகழி னிற்பார். (௱௭௭)

அங்குநின் றிளைப்பார் தம்மை யாண்டவாண் டகையை யுன்னி
இங்குணர்ந் திலையோ நாயே னிடும்பையென் றிரக்க மெய்திச்
சங்கவெண் குழையாய் மன்னன் றனக்கு வாம்பரிக ளீதல்
நங்கட னாகு மென்று நவின்றசொற் பொய்ம்மை யாமோ. (௱௭௮)

ஊனுடம் புடைய வாழ்வை யொழித்துனக் கடிமை யென்று
மாநிலப் புகலா நிற்ப வந்துனை யடைந்தேன் றன்னை
மீனவன் றன்பான் மீள விடுத்தனை வேலை நீருள்
ஆனபி னன்னீ ராற்று நீரென வாவ துண்டோ. (௱௭௯)

அறத்தனிச் செல்வி பாக வன்பிலே னின்பா லென்று
வெறுத்திடி னடியேற் கிங்கு வேறொரு துணையு மில்லை
செறுத்தவர் புரங்க ளெல்லாஞ் செற்றவ ரடியான் றன்னை
நிறுத்தினர் வெயிலி னென்றா னின்புகழ்க் கேற்ற மாமோ. (௱௮௰)

வானநா டவர்க்கு மேலோய் வந்துனக் கடிமை யிப்போ
தானநா னிடும்பை யுற்றா லாருனக் கடிமை யாவார்
நானெனு மனத்தார் சொல்லு நல்லுரை யன்றி நின்ற
ஈனனு மொருவன் சொல்வ தேறுமோ வுளத்தி லென்றார். (௱௮௧)

அவத்தொழில் புரியா மெய்ம்மை யன்பருக் கன்பு செய்து
பவக்கட லிடைவீ ழாமற் பரிந்தருட் பார்வை நல்கித்
தவப்பெரு வடிவங் கொண்டு தாளளித் தாளு மையர்
செவிப்புலன் புகுந்த தன்பர் செப்பிய மாற்ற மெல்லாம். (௱௮௨)

காம்படு தோளி பாகன் கண்ணுத லண்ண லன்பர்
தாம்படு துயர மெண்ணி யத்துயர் தணிக்க வேண்டித்
தேம்படு மலங்கன் மார்பிற் றென்னவன் றனக்கு வென்றி
வாம்பரி யளித்தல் சொல்வாம் வல்வினைப் பகையை வெல்வாம். ()

திருப்பெருந்துறைச்சருக்கம் முற்றிற்று.

இச் சருக்கத் திருவிருத்தம் - ௱௬௩.

---

# குதிரையிட்டசருக்கம்.

தந்தை யென்பவர் மைந்தர் வாதை தவிர்ப்ப தேகட னாதலால்
அந்த மின்றிய காத லன்ப ரழுங்கல் கண்டபி னரியெலாம்
வந்து வெம்பரி யாக வும்பரி வீரர் வானவ ராகவுஞ்
சிந்தை கொண்டன ரந்த மால்விதி தேடு வார்மதி சூடுவார். (௱அ௪)

தேசி லாநரி வந்து வந்து திரண்டு வெம்பரி யானபின்
ஆசி லாவிமை யோர்க டாமு மமைந்த சேவக ராயினார்
மாசி லாமணி மன்ற ராரிய வாசி வாவுநர் போலவே
ஏசி லாவுரு மாறி னார்மறை யிவுளி யின்புற மேறினார். (௱அ௫)

சேடு கொண்டு திரண்டு வீர ரிரண்டு னாங்கர் சிறக்கவே
ஊடெ முந்துக ளிம்ப ரெங்கணு மும்ப ருங்கிளர் வெய்தவே
கோடு டன்முடி விம்ம நீடிய கூடல் சூழ்மதில் வாயில்வாய்
ஆடல் வெம்பரி கொண்டு சென்றன ராதி யாருமை பாதியார். ()

அங்கு நின்றவர் சென்று நிம்ப வலங்க லானை வணங்கியே
எங்க ணுந்துகள் பொங்கி விம்ம வெழுந்து பல்லிய மார்ப்பவே
திங்கள் வெண்குடை மன்ன வாரிய தேச வெம்பரி யின்றுநந்
துங்க வன்மதி லின்பு றம்பு துவன்றி வந்த வெனச்சொனார். ()

வாசி யின்றிரள் வந்த வென்றலும் வாத வூருறை யையர்மேல்
நேசம் வைத்தவர் தம்மை முன்ன ரழைத்து நீள்கலை யாதிதந்
தாசில் வெம்பரி காண வம்பினென் றேதியங் கெழுந்தடையலார்
கூசு தன்படை சூழ வேயிறை கோயி லின்புற மெய்தினான். (௱அஅ)

வேறு.

வண்டுபடி யலங்கனெடுந் தடந்தோண் மாறன் மணிச்சிவிகை மீதேறி மதுரை மூதூர், கண்டிருகண் களிக்கும் வகையால வாயிற் கடவுளிடும் பரிவரவு காண்பா னெண்ணிச், செண்டுவெளி தனிற் போந்து பனிநீர் தோய்ந்த செழுங்கழுநீர் மதுமாலை சிறந்து தூங்குந், தண்டரள மணிப்பந்தர் நிழற்கீழ்ம்பொற் றவிசின்மிசை வீற் றிருந்தான் றானை சூழ. (௱அக)

முத்தமிழின் றிறநவிலும் புலவர் சூழ முதுமறையோர் மங் கலச்சொன் முறையிற் கூறக், கைத்திகழும் வளைபுலம்பக் கலன் கண் மின்னக் கன்னியர்க ளிருமருங்குங் கவரி வீசக், கொத்துல வும் பலமலரின் வாசந் தோய்ந்து குலவுமிளந் தென்றல்வர மாதர் பாட, மெத்துமணி முத்தமெனும் பணிகள் பூண்டு வெண்மதியின் றோற்றம்போல் வீற்றி ருந்தான். (௱கூ)

மங்குல்படி தடம்புரிசை வாத வூரர் மனங்களிப்ப விழிகளிப்ப வழுவி லாத, திங்களெனுந் தன்மரபு விளங்க வென்றுந் திருநீறு மஞ்செழுத்துஞ் சிறந்து மல்கச், சங்கினுடன் காகளங்கண் முழவ மார்ப்பத் தயங்கியெழுந் துகளுயர்வான் றன்மேற் செல்லத், துங்க நெடுங் கடல்பரந்து வருதல் போலத் துவன்றி வரும் பரித்திரளின் றோற்றங் கண்டான். (௱கூக)

வேறு.

அங்கிளர் மதுரையம் பதியி லாவணித்
திங்களின் மூலநாள் செறிதி னத்தினிற்
எங்கணு நீறுமஞ் செழுத்து மோங்கிடச்
சங்கர னிடும்பரிச் சமூகம் வந்ததால். (௱கூஉ)

தூத்திரண் மணிகெழு சோதி மாமுடிப்
பார்த்திவன் விழிநலம் பருக வீதியிற்
கூத்தினர் செயலெனக் குலாவு வாம்பரிச்
சாத்தினர் வரும்பெருந் தன்மை கூறுவாம். (௱௯௩)

கட்டிய சுரிகையர் கவின்கொள் வாளினர்
பொட்டணி நுதலினர் பொலன்செய் மேனியர்
பட்டுடை மருங்கினர் பவள நீள்வடம்
விட்டொளி விளங்கிய வியன்கொண் மார்பினர். (௱௯௪)

புன்மயிர்ப் பீலியர் புலியின் றோலினர்
பின்மலர்ப் பாசிலை பிணைத்த குஞ்சியர்
வன்மொழிக் குரலினர் வயங்கு தூணியர்
வின்மலி கரத்தினர் வெறித்த பார்வையர். (௱௯௫)

பொன்னியல் குழையினர் பொலன்செய் மாலையர்
பன்னிறச் சாத்தினர் பணித்த தோளினர்
சென்னியிற் கதிர்மணி யிலங்கு சேடனைப்
பின்னிவிட் டுளதெனப் பிணைத்த குஞ்சியர். (௱௯௬)

தாங்கிய சுரிகையுந் தயங்கு வேல்களும்
வாங்கிய சிலைகளுங் கணையும் வாளுமாய்
ஞாங்கரி லெவர்வர நாப்பட் டோன்றினார்
தேங்கிய நதிமதிச் சென்னி யண்ணலார். (௱௯௭)

## வேறு.

நச்சுரக வச்சிமணி நண்ணுமொரு வண்ணக்
கச்சிடை விசித்துள கவின்கொளுடை வாளும்
பச்சைமுழு நீலமொடு பன்னிறவ டஞ்சேர்
செச்சைநிற மன்னிய திரண்டவி ருதோளும். (௱௯௮)

ஒப்பரிய சட்டையு முடுத்திலகு பட்டுந்
தொப்பியு முகத்திடை துலக்கமுள ராஜிச்
செப்பரு நலங்குலவு செண்டொருகை கொண்டே
இப்படியி லிப்படிவம் யாவருள ரென்ன. (௱௯௯)

கட்டுபடி மீதின்மணி கச்சைமணி முன்பின்
இட்டவிரு பக்கமணி யின்னொலி புலம்பப்
பட்டிலகு பக்கரை பனிக்கவரி யெட்டும்
விட்டொளி விளங்குமொரு வெண்பரியி லேறி. (உ௱)

வீசுகவ ரித்திரண் மிடைந்தொளிர மீதே
தேசொடு கவித்துள செழுங்குடைவ யங்கப்
பூசல்புரி வெம்பரி பொருந்துபடை யூடே
மாசில்குல வாரியரின் மன்னரென வந்தார். (உ௱க)

மன்னவனு மிங்கிவர் வருந்தகைமை கண்டே
தன்னுளம கிழ்ந்திரு தடங்கணிமை யாமல்
அன்னமெனு மூர்திநெடு மாலரனை யல்லால்
இன்னவெழில் யாவருள ரென்றதிச யித்தான். (உ௱உ)

பண்ணிய தவத்துள பயன்பரியின் மீதே
நண்ணிய தெனத்தமி னயந்தனர் வியந்தார்
எண்ணிய முடித்தன ரெனக்கருதி நின்றார்
புண்ணிய மறைத்தமிழ் புகன்றதிரு வாயார். (உ௱௩)

தூயசுடர் வேல்பல சுழற்றியெதிர் செல்வார்
வாயொலி விளைப்பரிகல் வாளினை விதிர்ப்
நேயமொடு தம்மிலணி நின்றுசமர் செய்வார்
ஆயின ரரன்புடையி லானபரி வீரர். (உ௱௪)

நீறுசிவ நீதிநிலை நிற்கவுல காளும்
மாறனு மகிழ்ந்துதவ மன்னரை யழைத்தே
கூறரிய வாரிய குலேசரொரு வீதி
ஏறும்வகை சென்றரையு மென்றினிது சொன்னான். (உ௱௫)

என்னிவன் மொழிந்தன னெனத்தமி லிரங்கா
மன்னிய வருந்தவரும் வாண்முக மலர்ந்தே
கன்னலை நலங்கொள்கனி யைக்குறுகி நெஞ்சான்
முன்னுற வணங்கிவிழி முத்துதிர நின்று. (உ௱சு)

மன்றன்மல ரோனுநெடு மாலுமுரு வேறா
அன்றமுத வின்றமறி யாதவகை நின்றாய்
வென்றிவிடை யன்றியுயர் வெம்பரியின் மீதே
இன்றுனை வணங்கமுன மெத்தவ முயன்றேன். (உ௱எ)

வந்தபடி யிவ்வுரு வணங்குமிது வல்லால்
அந்தவடி வாகிலுனை யாரறிய வல்லார்
இந்தவகை கண்டடி யவர்க்கெளியை யென்றே
சிந்தைதனி லன்பொடு தெளிந்ததுல கெல்லாம். (உ௱அ)

என்றுமுக மன்பல வியம்பியரு ளாலே
வென்றிபுனை மீனவன் விளம்புமொழி சொன்னார்
கொன்றைமுடி யாருமதி சைந்துகொடை மாறன்
நன்றியொடு காணும்வகை நற்பரி யுகைத்தார். (உ௱கூ)

மன்னரவ பந்தமுடன் வட்டநெடு வீதி
என்னுமிவு ளித்தொழில்கள் யாவுமினி தேறி
உன்னுமன வேகமென வோடுமுயர் பாய்மா
நன்னடமி டும்படி நடாத்தியெதிர் வந்தார். (உ௱ய)

வெம்பரியி னண்ணலை வியந்துதமிழ் மாறன்
கம்பமுடி யெய்தவொரு கைவிரல் சுழற்றா
அம்பொன்விலை யில்லதொ ரருங்கலை யளித்தான்
எம்பரமர் செண்டின்மிசை யேற்றுநகை செய்தார். (உகக)

## வேறு.

ஏற்றவொண் கலையை நேச மெய்தினு னொருவன் சென்று
காற்றென விரைவி னெய்திக் கடிதுதன் கரத்தில் வாங்கிப்
போற்றிலன் முடியின்மீது புனைந்தில னென்று மாறன்
நீற்றினன் மறைப்பி னாலே நெஞ்சிடை வெகுட்சி கொண்டான்.

வெளிப்பட வரிய மேனி விண்ணவன் கண்ணு நெஞ்சுங்
களிப்புற வருதல் கண்டுங் கண்டிலன் கன்னி நாடன்
ஒளித்துல கெங்கு நிற்போ னுறுபவ மொழித்து ஞானம்
அளித்திடி னன்றி யாவ ரவன்றிற மறிய வல்லார். (உக௩)

எண்டிசை மன்ன ரன்பா லீந்தமென் கலைகள் யாவுஞ்
சென்டிடைக் கோட லன்னோர் தேயநல் வியற்கை யென்றே
வண்டமிழ் வாத வூரர் மாமதுரேசர் னெஞ்சிற்
கொண்டுள முனிவு தீரக் குறைந்துமுன் னின்று சொன்னார். ()

நலத்தகு மிந்த நீர்மை கேட்டபி னயந்து மன்னன்
கலக்கமி லிவுளி நன்னூல் கற்றவர் தம்மை நோக்கி
இலக்கண விதியா லுள்ள விரும்பரி யிழிவு மேன்மை
துலக்குற நும்மி னாடி யெம்முடன் சொல்லு மென்றான். (உக௫)

சொற்றிகழ் துரக நூலின் றுணிபொரு ளுணர்ந்து ளோருங்
கொற்றவெம் பரிகட் குள்ள குற்றமுங் குணமு நாடிப்
பொற்றடங் கிரியின் மீது பொருகயல் பொறித்து மீண்ட
வெற்றிகொண் மன்னர் கோன்மு னிவ்வகை விளம்ப லுற்றார்.

## வேறு.

தாவினைச்சந் திரசுழியா மண்டா வர்த்தந் தண்டையடியிற் சுழியா முடலின்பக்க, மேவுசுழி கௌவகமாங் காகா வர்த்த மேன்மைதிகழ் முன்வளையச் சுழிதா னாகும், பாவுசெழுங்கேதாரி யடியிற் சேர்ந்த பயனில் கொடுஞ் சுழிகேசா வர்த்தமாகும், பூவமருங் கச்சையிற்பட் டடையே யாகப் புகன்றசுழி யிச்சுழிகள் புணரா வாகி.

கொம்புகன்னந் திருகுகன்ன நஞ்ச பாதங் கொள்ளிக்கால் வெள்ளிக்கண் டீனி குன்று, வெம்புதழற் சுடலைமுகப் பரனேர் கண்ட மண்டப்பாழ் விலங்குபல வண்ட மாதல், செம்பொறியா மக்கினிசித் திரங்கண் மூன்று சிறந்தினிய மட்டிற்பா லறுபா லென்றே, அம்புலியோர் மொழிந்தபழு திவையு மின்றி யடி நாவிற் குரம்பிரட்டை யாகா வாகி. (உ௧அ)

சிரமதனி லிரண்டுசெழுந் துளைப்பி ளுன்கு சிறந்தவுரந்தனி லிரண்டு நுதன்மே லொன்று, குரவமிசை நின்றசுழியொன்றி னோடு குலவியவீ ரைந்துசுழி குறையா வாகி, நரிவெருகு கருங்காக மலகை கோழி ஞாளிசெழுங் கேழலெனுங் குரலின் றாகி, விரவு பெருந் திரைவேலை மங்குல் சங்கம் விடை முழவம் போன்முழக்க மிகவுண் டாகி. (உ௧௧)

உருத்திகல்செய் புலியுளியங் கழுதை செந்நா யொண் பூனை நரியினுடன் கரிய காகந், தரித்தவழற் புகைநிறமும் புனையா வாகித் தருக்கிமருத் தெனுங்கவனத் தன்மை யெய்தி, விரித்தகதிர் வெண்டாளந் திங்க ணீல மென்கமலத் தாதுசெழுங் கனகங் காயா, அரத்தமலர் நல்லபசுங் கிள்ளைபோல வமைந்தவொளி தயங்கியவங் கத்த வாகி. (உஉ0)

நெற்றியகன் றுயர்குரவ முடைத்தாய் வெண்மை நிறைந்து தமி லொத்திலகு மெயிற்ற வாகித், துற்றநறுங் கந்தமிகச் சிறந்து நாவுஞ் சூதவிளந் தளிர்போலு மருணந் தோய்ந்தே, உற்ற விரண் டிமைமயிருந் தொகையுண் டாகி யுக்கிரமாம் விழிப்பார்வை யுடைய வாகி, முற்றுமெயிற் றசையின்றி யுள்வளைந்து முக்கோண மெனத் திகழு முகத்த வாகி. (உஉ௧)

உளையினுடன் றலைமயிரு நிறமொன் றாகி யுரத்தினுடன் கழுத்துரக படமே போன்று, வளைசிறந்த தொனிபரந்து குவிந் துள் வாங்கி மண்டலமுண் டாயுரங்கொள் குரங்கள் சேர்ந்து, கிளை கொணரம் புகள்கரந்து தசைதா னொன்றிக் கிளர்முழந்தா ணெளித் தபதங் கெழும லின்றி, நெளிமுதுகு புனைந்துதொடை திரண்டு தண்டை நீண்டுடல நெய்த்தநிற நீர்மை யாகி. (௨௨௨)

மிக்கசெழு மறைநாவிற் கமல நாதன் விழிப்புனலில் விண் ணோர்க ளெண்மர் தம்பான், மைக்கடன்மே லமிர்தத்தி லங்கி மீதின் மல்குகருப் பையிலுலூக வண்டந் தன்னிற், றொக்கவெழு பேதமெனு மிவற்றிற் றோன்றுந் தொன்மையவா யீரிரண்டு துணைத்தா ணெற்றி, ஒக்கவெளுக் கும்பரிக ளுளவாய் வானி லொண்புனலிற் செல்லுநெறி யுளவு மாகி. (௨௨௩)

மங்காளன் சாரங்கன் கங்கா நீலன் மௌவழகன் கொங்கா ளன் சன்ன சம்பான், குங்குமச்சோ ரன்கரியா னீலன் சாரன் குலவுமள்ளா னுரஞ்சிவந்தா னல்லான் பொல்லான், றங்குகருங் காற்சம்பா னென்று கூறுந் தன்மையுள பன்னிறமும் புனைந்த சாதித், துங்கமிகும் பரியிவையென் றவற்றின் றன்மைத் தொன் மையுரைத் தரசனைமுன் றொழுது நின்றார். (௨௨௪)

நற்பரியி னியல்புணர்ந்தோ ரின்ன வாறு நவின்றமொழி கேட்டுமிக நயந்து வெள்ளி, வெற்பனைய விடையேறி யளிக்குந் தெய்வ வெம்பரிகள் யாவும்விலை மதித்த பின்னர்ப், பொற்புடைய தன்பொருண்மே லெண்ம டங்கு போதுதலாற் பொங்குமகிழ் வெய்தி மாறன், றற்பரனை முகநாடிக் கயிறு மாறித்தருகதுரகத் தொகுதி தம்மை யென்றான். (௨௨௫)

வேறு.

காத்துல கனைத்து முய்யக் கண்ணருள் செய்யு நீதிப்
பார்த்திவன் கருமஞ் செய்வார் பற்றியங் கரத்தில் வாங்கச்
சாத்தவர் தம்மி லாங்கோர் சால்பினர் கயிறு மாறி
ஈத்தனர் பந்தி யூடு சேர்த்தன ரிவுளி யெல்லாம். (௨௨௬)

திண்டிறல் கெழுவு நேமித் தென்றிசைக் கிறையுஞ் செய்ய
வண்டமிழ்க் கிறையுங் காண வந்திடு திசையி னேகிப்
பண்டைநற் படிவ மாகிப் பணிந்துவின் னவர்கள் சூழக்
கொண்டலைப் பொருவு கண்டர் குலவுதங் கோயில் புக்கார்.(உஉஎ)

வாய்ந்தன பரிக ளும்மா லென்றெழில் வாத வூரின்
வேந்தரை மனையி லேக விடுத்துள மகிழ்ச்சி கூர்ந்து
சார்ந்தமெய்த் தகைமை யோருந் தானையுஞ் சூழ வேகி
ஆய்ந்தநற் றமிழ்நூல் வல்ல வரசனுங் கோயில் புக்கான். (உஉஅ)

அத்தின மகல மாலை யணைதலும் பரிக ளெல்லாம்
நித்தன தருளி னாலே நெடுங்குர னரிக ளாகி
மெய்த்தமிழ் மதுரை மூதூர் விழித்துயி லொழிந் திரங்கத்
தத்தமி லுடன்று கூடித் தனித்தனி களித்து நின்று. (உஉகூ)

வேறு.

நின்ற நின்ற நெடும்பரி யாளர்மேற்
சென்று வெம்பகை செய்து வெருட்டியே
தின்று கின்ற துரங்க மொருங்கொடு
கொன்று நின்றுயர் கூவிளிக் கொண்டவால். (உகூய)

வரைசெய் கோபுர மாட நெருங்கிய
அரச வீதியு மாவண வீதியும்
முரச வோசை முழக்கொழிந் தேமிகக்
குரைசெய் வாய்நரிக் கூக்குர லானதால். (உகூக)

பாடி யாரணம் போற்றமன் றிற்பயின்
றாடி யார்வினை யாட்டின் புதுமையால்
ஓடி யாரு மொளித்திட வென்றொரு
கோடி யானது கூவு நரிக்குழாம். (உகூஉ)

தூங்க மாறன் ருெருகுபடை வெங்கொலை
தங்கு மாயுதந் தாங்கி யெதிர்க்கவே
எங்கு மான நரிகளெல் லாங்கொடுஞ்
சிங்க மாயமர் செய்யத் தொடங்குமால். (உ௩௩)

நீடு வாடை யிடந்தொறு நின்றணி
கூடு வார்மிகக் கூவி வெருட்டுவார்
ஓடு வாரொளித் தோடிப் புகுமிடந்
தேடு வாரெதிர் சென்றமர் செய்குவார். (உ௩௪)

எங்க ளாருயிர் காத்தரு ளின்றணி
திங்க ளாயெனத் தெய்வம் பராவுவார்
அங்க பாட மடைத்தரண் செய்குவார்
மங்கு லாடு மதிற்றலை யேறுவார். (உ௩௫)

நற்ற வஞ்செய நன்கில தானதோ
கொற்ற வன்செய்ய கோல்கொடி தானதோ
இற்றி தன்பய னென்னென வின்னணம்
உற்றி ரங்கினர் கூடலு ளோரெலாம். (உ௩௬)

தூய வன்றுர கத்தொழி லாளர்கள்
கோயி லின்கடைக் கூக்குரல் செய்துபோய்
மாய வெம்பரி வந்தவெ லாநரி
ஆய வென்றர சற்கெதிர் கூறினர். (உ௩௭)

மாக்க ளோசையும் வாம்பரி யோசையுங்
கூய்க்கு லாவு குறுநரி யோசையும்
மீக்கொண் மாமுடி மீனவன் றன்செவித்
தீக்கொள் வேலைச் செருகிய தொத்தவே. (உ௩௮)

இந்த வாறொலி கேட்டிரு கண்டழல்
சிந்த வாகஞ் சிறுவியர்ப் பெய்திட
அந்த மாறன் வெகுட்சிகண் டண்ணலார்
வந்த மாய நரிப்படை மாற்றினர். (உ௩௯)

பொன்கொ ணுடன் புனைந்த நலந்திகழ்
மின்கொ ளாரம் விளங்கிய மொய்ம்பினுன்
றன்க ணுகி நடப்பவர் தண்டல்செய்
வன்க ணுளரை வம்மெனக் கூவினுன். (உசல)

## வே று.

நரியினிற் ருெகுதி யெல்லா நற்பரித் திரள்க ளாக்குஞ்
சரிதியைக் கொணர்தி ரென்னத் தாடொழு தவர்க ளோடி
இருபிறப் புடைய ராகி யினிப்பிறப் பில்லார் தம்மை
விரைவினிற் குறுகி நும்மை யழைத்தனன் வேந்த னென்ருர். ()

சித்தருக் கன்பு பூண்ட சித்தரு முறுவல் செய்து
நித்திலத் தொளிபோன் மின்னு நீறெனுஞ் சாந்து பூசிப்
பத்தருக் கேவல் செய்வார் பதமலர் முடியிற் சூடி
முத்தமிழ்ப் பொருனை நாடன் முன்புசென் றருகு நின்ருர்.(உசஉ)

மூட்டெழு மழல்போன் மன்னன் முனிவுடை முகத்த னுகி
ஈட்டுநம் பொருள்க ளெல்லா மிரப்பவர் தமக்கு நல்கி
நாட்டுள நரிக ளெல்லா நற்பரி யாக்கி நம்முன்
காட்டின ரிவர்செய் மாயங் கண்டிரோ வமைச்ச ரென்ருன்.(உசங)

தன்ருெழில் வழுவி னேர்க ளமக்குறு துயரஞ் செய்தல்
வன்றிற லரசர் நீதி யாயினு மறைநூ லாளர்
சென்றுயர் தவத்தி னிற்பார் தெரிவையர் விருத்தர் பாலர்
என்றிவர்க் குறுகண் செய்வ தெம்மனோ ரியல்பன் றென்று.(உசச)

தண்டல்செய் வன்க ணுளர் தங்களை நோக்கி நங்கண்
கண்டிட முன்னில் லாமற் கடிதினி லிவர்க்கொண் டேகி
மண்டழல் வெயிலி னூடு வளைப்பினி னிறுத்தி நம்பாற்
கொண்டுள தனங்க ளெல்லாங் குறைவற வாங்கு மென்ருன். ()

வன்றிற லேவ வாளர் மற்றவர் தமைக்கொண் டேகி
ஒன்றிய வளைப்பி னூடு நிறுத்தலு முலகோர் போற்றும்
நன்றிகொள் வாத வூரர் நரியெலாம் பரிக ளாக்கித்
தென்றிசை நிருபற் கீந்த சித்தரை நினைந்து சொல்வார். (உசசு)

தொல்லையோ ரிருவர் தேடுஞ் சோதியே யாது செய்வேன்
றில்லையோர் பரவ நின்ற தெய்வமே யாது செய்வேன்
இல்லையோ கருணை நின்பா லின்றெனை யடிமைக்கொண்டாய்
அல்லையோ தமியே னின்ன லறிதியோ வறிந்தி லாயோ. (உசஎ)

பரித்திர ணரியே யான பான்மைகண் டடியேன் றன்னை
வருத்தின ரிதனை மாற்ற வல்லநீ மாற்று யென்னிற்
றரித்தனை விடத்தை யென்னுந் தன்மையும் புரங்கண் முன்னாள்
எரித்தது மிலையா மென்றென் றிரங்கின ரெவர்க்கு மிக்கார். (உசஅ)

நன்றிகொள் கடவுட் கங்கை நதியினை வைகை யூடு
சென்றெழில் வாத வூரர் பேரிடர் தீரென் றேவி
அன்றொரு மடந்தைக் காளா யடியவர்க் கெளியார் கொன்றை
துன்றிய முடியின் மேன்மண் சுமந்தமை யுரைத்தல் செய்வாம். ()

குதிரையிட்டசருக்கம் முற்றிற்று.

இச்சருக்கத் திருவிருத்தம் - சுசு.

---

# மண்சுமந்தசருக்கம்.



தங்கிய வருளின் மிக்கார் தாம்படு மிடும்பை யுன்னி
அங்கண ரவர்பா லுற்ற வருந்துய ரகற்று கென்று
கங்கையை விடுப்ப வேகிக் கடும்பெருக் கெடுத்து வைகைப்
பொங்கலைப் புனலா யெங்கும் புரண்டது புணரி யேபோல். (உருய)

சேர்ந்தவெண் முத்த மூரல் செய்துநீர்க் கலேமே லார்த்துக்
கார்தளஞ் செங்கை வீசிக் கனதனக் குரும்பை காட்டி
மார்தளிர்ப் பதங்கண் மீது வருதிரை ஞெகிழ மார்ப்பப்
போர்துள கணிகை மாதர்ப் போன்றது வைகை யாறு. (உருக)

திரைப்பெரு மருப்பி னாலே செழுங்கரை யிருபாற் குத்தி
மரத்திரண் முறித்துச் சாலி வயலெலா மழித்து வாயால்
நுரைத்திரள் சிந்தி மீதே நுண்மண விறைத்து வண்டு
நிரைத்தலின் மதத்த வேழ நிகர்த்தது வைகை யாறு. (உருஉ)

மைத்திகழ் குழலா ளந்த மலேமகண் முலேயிற் றோய
அத்தனே வருத்து மேன்மை யனங்கனு யுதமென் றெண்ணி
ஒத்தெழுந் தொளிருங் கன்ன லுயங்குசெங் கழுநீர் கஞ்சம்
புய்த்தவை யழிக்க வேண்டிப் புரண்டது பழன மெல்லாம். (உருங)

வடம்படைத் துடைய பார வனமுலே முகத்து மாதர்
இடுந்துகில் கடுகி வீழ்வ தென்னநின் றழகு செய்து
தடம்படக் கிடந்த தெங்கின் றயங்குசெங் குரும்பை மீது
நெடும்புனற் றிரைபோய் மீள நிவந்தது வைகை யாறு. (உருச)

மீதெழு பரிதி கையால் விடுங்கனல் வெம்மை தீரப்
பூதல மடவாள் போர்க்கும் புதியவெண் டுகிலே போல
ஏதலர்ப் பழனஞ் சோலே யேதெனப் பரந்து கஞ்ச
மாதுறை மதுரை மூதூர் மதிற்புறஞ் சென்று சேர்ந்து. (உருரு)

தாங்கிய துவச நாஞ்சிற் றடமதி விடியத் தள்ளி
ஆங்கெழின் மதுரை மூது ரழிப்பது போன்று செல்லப்
பாங்குள விடங்க ளெல்லாம் பரந்தது வைகை நன்னீர்
ஈங்கெது செய்வோ மென்னு யாவருங் கவற்சி கொண்டார். (உருசு)

மைக்கடுங் களிற்றுத் தானே வழுதியுங் கடிது நண்ணித்
தொக்கபொன் மலரு முத்துந் துகின்மணிப் பூணு நல்கித்
தக்கவண் புவியி லுள்ளோர் தமக்குயி ரென்னு மன்னே
மிக்கநின் கோப மாறல் வேண்டுமென் றிறைஞ்சி நின்முன். (உருஎ)

கலைமதிக் குலத்து மன்னன் கன்னிநன் னுடன் கூறுந்
தலைமைமிக் குடைய சொல்லாற் றன்முனி வொழித்த லின்றி
மலையெனத் திரைகண் மேன்மேல் வருதல்கண் டிதுவென்
நிலையுறச் சிந்தை யுள்ளே னோடினு னோடிப் பின்னர். [னென்னு

ஆதியாங் கடவு ளெந்தை யாலவா யமலன் மங்கை
பாதியான் சிறந்த பூசை பண்டையிற் குறைந்த துண்டோ
நீதியாந் தவத்தின் மிக்கார் நெஞ்சகம் புழுங்க மண்மேற்
றீதியாஞ் செய்த துண்டோ செப்புமி னமைச்ச ரென்றான்.(உருக)

விளங்கிள மதிசேர் சென்னி வித்தகர் பத்த ரான
வளந்திகழ் வாத வூரர் வருந்திய வளைப்பி னீக்கி
உளங்கொள மகிழ்ச்சி செய்யி னுறுபுன லூர்கொ ளாதென்
றளந்தறி வறிந்து கூறி யாங்கவர் தொழுது நின்றார். (உகூய)

மன்னனு மவர்க டம்மேன் மகிழ்ந் தருட் பார்வை நல்கி
என்னுள மதித்த வாறே யிங்கினி துரைத்தீ ரென்று
கொன்னுறு வளைப்பி னூடு நிற்குநற் குணத்தி னுரை
முன்னுற வழைத்து நட்பான் முகமலர்ந் திதுமொ ழிந்தான். ()

பாம்பணி செய்ய வேணிப் பரம்பர னடியார் கையில்
ஆம்பொரு ணமதே யானு லறம்பிறர்க் காவ துண்டோ
தேம்படு மலங்கன் மார்பீர் செயலிதற் குமது மேனி
சாம்புவ தவமே யான்செய் தண்டலே தகவி லாமை. (உசூஉ.)

உற்றவித் தகைமை முன்னே யுணருமிவ் வுணர்வி லாமை
குற்றமித் தனையு நம்மேற் கொண்டனங் குறைகொ ளாமன்
மற்றினிப் புகலு மாறென் வைகைநம் மூர்கொ ளாது
நற்றவத் தலைவர் நீரே யடைப்பியு மெனந வின்றான். (உசூந)

அருட்பெரு வழுதி யிவ்வா றன்புரை பகர்ந்த போதுந்
தரிப்பரி தென்ன முன்னந் தழலென வெகுண்ட போதும்
விருப்பொடு வெறுப்பி லாத மெய்ம்மையார் தம்மை யாண்ட
திருப்பத நினைந்தார் வைகைச் செழும்புன லூர்கொ ளாமல். ()

சுந்தரப் பரிமேல் வந்த தோற்றமே மனத்தி லுன்னி
அந்தரத் திறைஞ்ச நன்னீ ரடங்கியுள் வாங்கிச் செல்ல
வெந்துயர்ப் பிறவி யான விடங்கிளர் வேலை நீந்தி
வந்தருட் கரையிற் சேர்வார் வைகையங் கரையிற் சென்றார். ()

முறைமுறை வணங்கி நின்ற வாரியர் முகத்தை நோக்கி
அறைதிரை நெடுநீர் வைகை யணைகடி தடைத்தல் வேண்டும்
உறையுமிம் மாந்த ரெல்லா மொல்லையில் வம்மி னென்று
பறையறை வித்து நம்மூர்க் கிவ்வுரை பரப்பு மென்றார். (௨௬௬)

ஆரியர் கடிதி னேடி வன்பறை யறைவித் தம்பொற்
றேரியல் வீதி தோறுஞ் சென்றுரை பரப்பு முன்னே
கூரிய கொட்டு மண்சேர் கூடையுங் கொண்டு வைகை
நீரியல் கரைமேல் வந்து நின்றனர் மதுரை மாந்தர். (௨௬௭)

நீறுகொண் டிலங்கு மேனி மறையவர் நியமஞ் செய்த
வீறுகொண் டிடங்க டோறு மாரியர் விரைவிற் சென்று
கூறுகொண் டெவர்க்கும் வேறு கோலறை யளந்து செங்கை
மாறுகொண் டுறுக்கி வைகை வன்கரை யடைக்க லுற்றார். (௨௬௮)

கண்பெறு கழையின் முத்துங் கடகரி மருப்பின் முத்தும்
வெண்பணி லத்தின் முத்து மேதகு கரும்பின் முத்தும்
வண்புனற் றிரைகள் வீச வரையெனக் குவைகள் செய்து
பண்படப் பொருந்த நீருட் பதித்துயர் வரம்பு செய்வார். (௨௬௯)

பரித்திர ணிறுத்து மென்பார் பாம்புக ளுருட்டு மென்பார்
திரைப்புனன் மிகுத்த தென்பார் தேவர்கட் கபய மென்பார்
நிரைப்படு மகிலோ டார நெறிப்பட வொதுக்கி நீடு
வரைப்பிடைக் குவித்து நிற்பா ராயினர் மதுரை யுள்ளார். (௨௭௰)

எருடைப் புதுநீர் வைகை யிவ்வகை யடைக்கு மெல்லை
நீருடைப் பொலிந்த வேணி நின்மலற் கன்பு மிக்காள்
சீருடைத் தவத்தின் மிக்காள் செம்மனச் செல்வி யென்னும்
பேருடை நரைமூ தாட்டி பிட்டுவிற் றுணவு கொள்வாள். (௨௭௧)

ஆங்கவட் களந்து நீக்குங் கோலறை யடைப்ப தின்றி
ஓங்கலைப் புதுநீர் வைகை யுடைப்பினை யடைக்கு மெல்லை
தீங்குள தறுக ணாளர் சென்றவட் குறுகண் செய்ய
ஈங்கெனக் குறுதி யாவார் யாவரோ வென்றி ரங்கி. (உஎஉ)

பிட்டினைக் கூலி கொண்டு பெருங்கரை யடைப்பா ரின்றி
நெட்டிலைச் சூல மேந்து நின்மலன் கோயி லெய்தி
மட்டறத் தளர்ந்த கொங்கை மார்பினிற் கண்ணீர் வார
எட்டுருத் திரண்ட பாத மிறைஞ்சிநின் றினைய கூறும். (உஎங)

வேறு.

நெட்டரவக் கச்சுடையாய் நீலநிறத் திருமாதின்
வட்டமுலைத் தழும்புபட வந்தணையுந் திருமார்பா
கட்டியசெஞ் சடையாயுன் கண்ணருள்கொண் டெப்பொழுதும்
பிட்டினைவிற் றுண்பேற்கும் பேரிடும்பை யுளதாமோ. (உஎச)

யாருடனு மினிப்புகல்வே னெனையுடையாய் வைகையினன்
நீருடையா தடைக்கும்வகை நீசிறிதின் றருளாயேற்
சீருடையா யுனக்கடிமை செய்யுமவர்க் கெளியையெனும்
பேருடையா யெனப்பலரும் பேசுமொழி பழுதாமே. (உஎரு)

தாயுமிலை தந்தையிலை தமருமிலை தமியேனைப்
பேயினுட னின்றாலும் பிரித்தறிய வொண்ணாது
தீயதென திலம்பாடென் சிந்தையில்வெந் துயர்தீர
நீயருளா தொழியினுயிர் நீப்பேன்மற் றென்செய்கேன். (உஎசு)

வேறு.

இன்றெனக் குறுதி யாகி யானிடும் பிட்டு வாங்கி
வன்றிறற் கூலி யாளாய் வன்கரை யடைப்பா ரில்லை
உன்றனக் கபயம் யானென் றுரைப்பவ டன்மே லன்பு
சென்றவட் காளா மாறு துணிந்தனர் தேவ தேவர். (உஎஎ)

ஆடையுந் துணிந்த சீரை யாக்கியே கூலி யாளாய்க்
கூடையுந் தலைமேற் கொண்டு கொட்டுடைத் தோள ராகிப்
பீடைகொண் டயர்வாள் காணப் பெரும்பசி யுடையார் போல
வேடைகொண் டொல்லை வந்தார் வேண்டியவடிவங்கொள்வார். ()

வந்தெனை யேவல் கொள்வா ருளர்கொலோ மற்றிங் கென்று
புந்தியின் மகிழ்ந்து கோயில் வாயிலிற் புகன்ற போதில்
அந்தநன் மொழியைக் கேளா வன்னைதன் னயர்ச்சி கூருஞ்
சிந்தனை யொழிந்து கூலி யாளரைச் சென்று சேர்ந்தாள். (உஎக)

புடையின்மே லுலகோ ரின்றிப் புனைந்துள புலித்தோ லாடை
உடையின்மே லசைக்குங் கச்சா மோங்குநச் சுரக மின்றிச்
சடையின்மேன் மதிய மின்றித் தாங்கிய மழுமா னின்றி
விடையின்மே லின்றி நின்ற வெளியனை வெளியிற் கண்டாள். ()

மைந்தநீ யெனக்கிங் காளாய் வருகென முன்னர்க் கூலி
தந்தியேல் வருவ னென்று சாற்றலு நுகர விப்போ
திந்தவா ரமுதம் போலு மினியபிட் டளிப்பே னல்லால்
அந்திவா யிதனை விற்றே யளிப்பனின் கூலி யென்றாள். (உஅக)

இரும்பசி யுடையே னன்னே யினியபிட் டளிப்பை யாகிற்
குரம்புகொண் டடைப்பன் யானே கோலறை முழுதுமென்னக்
கரும்புறத் துகின்மே லிட்ட பிட்டினைக் கரத்தா லள்ளி
விரும்பியிங் கிதனைக் கொள்வா யென்றனள் விருப்ப மிக்காள். ()

கூற்றடுங் கமல பாதர் குறுந்துணிக் கரிய சீரை
ஏற்றிடும் பிட்டு வாங்கி யின்புற வமுது செய்து
மாற்றரும் பசியை யன்னே மாற்றினை யினிப்போய் வையை
ஆற்றினின் கூற்றி லுண்டா மருங்கரை யடைப்ப னென்றார். ()

நன்றுநன் றின்னு மன்னே நயந்துபிட் டளித்தல் வேண்டும்
என்றுதந் துணிந்த சீரை யேற்றது நிறைய வாங்கித்
தின்றுதின் றலைநீர் வையைச் செழுங்கரை யதனிற் சென்று
குன்றெனுந் தவத்தா யுன்றன் கோலறை காட்டு கென்றார். (உஅச)

மெய்த்தவம் புரிவார் தம்மில் விழுப்பமிக் குடைய வன்னை
இத்தடங் கரையை வல்லே யெம்பிரீ யடைப்பா யென்னப்
பைத்தவெம் பகுவாய் நாகம் பனிமதிப் பாதி கொன்றைக்
கொத்துடன் முடிக்க வல்லார் கோலறை யடைக்க லுற்றார்.(உஅரு)

பேர்ப்பர்மண் கூடை பெய்வர் பிறைமுடி மேற்சும் மாடு
சேர்ப்பர்பின் சுமந்து சென்றச் செய்கரை சிந்தி மீள்வர்
வேர்ப்பர்மெய் யிளைப்பார் போல மென்றுபிட் டிரத நாவிற்
பார்ப்பரவ் வன்னை தன்மேற் பரிந்தருட் பார்வை செய்வர்.(உஅசு)

பிட்டுநன் றென்று கூறிப் பிறைமுடி யசைப்பர் வேடன்
இட்டமென் றசையிற் சால வீசனுக் காமி தென்பர்
கொட்டுடன் கவித்த கூடை கொண்டுநின் றாடல் செய்வர்
வெட்டிமண் குவிப்ப ரோடி விரைந்தடிப் பாய்ந்து மீள்வர். (உஅஎ)

பரிவுடை மனத்தி னாளும் பரமர்தஞ் செய்தி கண்டு
கரையினை யடைத்தல் வேண்டு மென்றுதன் கருமங் கூறாள்
ஊரனுடை வழுதி தூதர் காண்பரே லுறுகண் செய்வார்
இருவினை யுடையேன் மற்றிங் கென்செய்வே னெனநி னைந்தாள்.

மற்றவ ணிலைமை வெள்ளி மன்றுளின் றாடுகின்ற
கொற்றவ ரறிந்து பின்னுங் கூடைமண் கரைமேற் கொட்டி
உற்றவிக் கரையை யன்னே யொல்லையி லடைப்ப னின்னே
சற்றிதற் கிரங்கா தேகுன் றகவுடை மனையி லென்றார். (உஅகூ)

நீறணி புனித மேனி நின்மலன் விடுப்ப வேகித்
தோறிரை முகத்தி னுடன் றான்மனை புகுது மெல்லைக்
கூறருந் தவத்தின் மிக்காள் கோலறை யடைப்ப வஞ்சி
மாறிடு திரைக்கை தன்னாற் றொழுதனள் வைகை மங்கை. (உகூ0)

சிறந்தமண் கூடை வேணித் திருமுடிக் கொட்டை யாக
நிறந்திகழ் கொன்றை நீழ னிறைமண லணையே யாக
உறுந்தொழின் முயற்சி யாலே யுயங்கிமெய் யிளைத்தார் போல
மறைந்துல கெங்கு மான வள்ளலார் பள்ளி கொண்டார். (உகூக)

ஆங்கவர் துயிலு மெல்லை யருட்பெரு வாழ்வின் மிக்கார்
ஓங்கிய கருமஞ் செய்வா ராகியொண் பிரம்பு தாங்கிப்
பாங்குநின் றவரை நாடிப் பரந்தகோ லறையி லுள்ள
தீங்குநன் குணர்வீ ரென்னச் சென்றகன் கரையிற் சேர்ந்தார்.* ()

நன்குற வடைத்தல் செய்தா ரியாவரு மெனாந யந்து
சங்கர னடைக்கு நீடு தடங்கரை யவர்க ளெய்தி
எங்கணு முயர்ந்து தாழ்ந்த திவ்விடம் யார்க்கு நேர்ந்த
பங்கிது மொழிமி னென்ன நின்றவ ரிவைப கர்ந்தார். (உகரு)

பெருவள நீடு கூடற் பிட்டுவிற் றுணவு கொள்வாள்
ஒருமுது மடந்தைக் காளா யொருவன்வந் திங்க ணெய்தி
இருநில மகழ்ந்து கூடை யுட்சொரிந் திரங்கி நிற்பன்
சிரமிசை யெடுப்பன் மீளச் சிந்துவன் குவித்தல் செய்வான். † ()

பாடுவ னுடல் செய்வன் பையவோர் கூடை மண்ணை
நீடுதிண் கரையி லேறச் சொரிகுவ னெடிது நிற்பன்
ஓடுவ னோடி மீள்வ னொருகைமண் கரையி லேறப்
போடுவன் போக வென்னில் வருவன்வா வென்னிற் போவன். ()

பிட்டினை நுகர்வ னையா பெரிதுநன் றென்று செங்கை
கொட்டுவன் செய்கை காணி லரசிளங் குமர னொப்பான்
நெட்டலர்க் கொன்றை நீழ னெடுந்துயில் கொள்கின் றானங்
கட்டுரை சிறிதுங் கேளா னவன்றனைக் காண்மி னென்றார். (உகசு)

என்றலு மவனை யிங்கே கொணர்மினென் றவரு ணின்ற
வன்றிற லொருவன் கூற வாரியன் வல்லை யோடிச்
சென்றலு ஞான யோகச் செழுந்துயி லொழிந்து மூன்று
துன்றிய புரங்கள் செற்றார் துண்ணென விழித்தெழுந்தார்.(உகஎ)

---

* சென்றனர் கரையி லன்னோர் என்றும் பாடம். † மீள்வன் சிந்துவ னகுதல் செய்வான் என்றும் பாடம்.

விழித்தலுங் கடிது சென்ற வாரியன் வெருவ நோக்கி
மொழிக்கனல் சிந்தி யந்த முன்னவன் றன்னை யெய்தி*
அழைத்தலும் வருதல் செய்யா தஞ்சிநின் றிரங்கல் கண்டு
பழித்தவர் செங்கை பற்றி யீர்த்தனன் பரிவி லாதான். (உகூஅ)

ஆங்கவன் கடிதிற் றள்ளி யண்ணலை யெண்ணி லாத
தீங்கினன் முன்னர்க் கொண்டு சேறலும் வெகுட்சி யெய்திப்
பாங்குநின் றவரு ணின்ற பாவியைப் பாவி நோக்கி
ஈங்குவெங் குருதி சோர வடித்திடுங் கிவனை யென்றான். (உகூகூ)

கடுத்தசொல் வன்க ணாளன் கதத்துடன் மாறு கையில்
எடுத்தனன் முனிவர் விண்ணோ ரெடுத்தனர் தொழுது செங்கை
அடித்தன னடித்த போதி லன்புடை யரிவை பாகங்
கொடுத்திலர் துணுக்க மெய்த மறைந்தனர் குறைவி லாதார். (௩00)

## வேறு.

தார்மேனின் றிலங்குபுய வழுதி மேலுந் தன்மனைமங் கையர் மேலு மமைச்சர் மேலும், ஆர்மேலுஞ் சென்றுபொருஞ் சேனை மேலு மயன்மேலு மரிமேலு மறவோர் மேலுந், தேர்மேல்வெம் பகன்மேலு மதியின் மேலுஞ் சிறந்துளவிந் திரன்மேலுந் தேவர் மேலும், பார்மேலுங் கடன்மேலு மாங்கண்மேலும் பட்டதரன் மெய்யிலடி பட்ட போதில். (௩0க)

தந்தமுரு வொழிந்து பிறிதுருவ மெய்திச் சதுர்முகனுஞ் சங்காழி தரித்த மாலும், அந்தமுத றெரிவரிதாய் வெளியே நின்ற வண்ணலார் வடிவிலடி பட்ட போதில், எந்தவுல கங்களினு மிருந்து ளோர்க ளெம்முடலி லடியுறைத்த தென்று கூற, முந்தியெழும் பன்மொழிக ளுகாந்த வெல்லை மோகரிக்கு மெழுகடலின் முழக்கம் போன்ற. (௩0உ)

---

* யெய்த என்றும் பாடம்.

மாயையெனுங் கரும்பெரிய புனன்மேன் மொக்குள் வண்ண மெனு மெண்ணிலா வண்டத் துள்ளும், ஏயவகை யெண்பத்து நான்கு நூறு யிரமான பலயோனி யெவற்றி னுள்ளும், ஆயவுயிர்க் குயிராகி நிற்குந் தன்மை யவனிதலத் தஞ்ஞான ரறிந்து பாதச், சேயமலர் வழுத்துதற்கோ கூலி யாளாய்ச் சென்றுமுடி மண்சுமந் தார் தில்லை நாதர். (௩௱௩)

## வேறு.

மையணையுந் திருமிடற்றார் மெய்யிலடி வாதவூர்
ஐயருடம் பினும்வந்து படுதலுமே யயர்வெய்தி
உய்யவெனை யாட்கொள்வா னுவந்தொருவர்க் காளாகி
மெய்யமொழுந் தருளினரோ வென்றென்று மிகநொந்து. (௩௱௪)

தம்பெருமை யறியாத தம்மிறைவர் தமக்கிரங்கிக்
கம்பிதமுங் கண்ணீரும் வரக்கவற்சி யுறும்போதில்
வெம்பிறவி தொலைத்தார்முன் சூரியர்கள் விரைந்தோடி
உம்பர்பிரான் றிருவிளையாட் டெல்லாமங் குரைத்தார்கள். (௩௱௫)

வேட்டுருகும் பெருங்காதல் வித்தகரித் தன்மையெலாங்
கேட்டுமனந் தளர்ந்துமிகக் கிளர்ந்துவிழிப் புனல்பெருக
வாட்டிகழுஞ் சடையண்ணல் மண்சுமந்த விடங்கொடுபோய்க்
காட்டுமென மொழிந்தவரோ டவ்விடநேர் கடிதெய்தி. (௩௱௬)

அழுங்கியருப் பெருநாகி லடியேனும் வீழாமல்
எழுந்தருளும் பெரியோனே யெங்கணுளா யென்றென்று
தொழுங்கரமுங் கண்ணீருந் துளங்கியமெய்ப் புளகமுமாய்
விழுந்துபுரண் டிவ்வாறு புலம்பினர்மெய் யன்பாளர். (௩௱௭)

நீறுபடும் பொன்மேனி நின்மலனே நெடுங்கங்கை
ஆறுபடுஞ் சடைமுடியா யடியவர்கட் கெளியானே
மாறுபடும் புரமெரித்தாய் மாறுபடும் போதுடலிற்
கூறுபடுஞ் சிவஞானக் கொம்பினுனங் குழையாதோ. (௩௱௮)

கொங்கையான் மணிமார்பிற் குறியிடுமவ் வீறுடைய
மங்கையாள் பெருமானை மண்சுமக்க நினைத்தானோ
கங்கையா னலைக்கரத்தாற் கரைத்திலனோ புள்ளுருவாம்
பங்கயா சனனறியாப் பணிமுடியென் றறியானோ. (௬௱௬)

பிரமனுடன் றிருமாலும் பிறப்பகலப் பலகாலும்
பரவியிடு நறுமலரோ பத்தரிடும் பச்சிலையோ
புரிதருசெஞ் சடையோநற் புதுமதியோ வாயிரவாய்
வரியரவின் பலபடமோ மண்சுமந்த சும்மாடு. (௬௱௰)

கலையறியும் புகழ்வைகைக் கரைதிருவம் பலமாக
அலையெறியும் புனலோசை யந்தரதுந் துபியாகத்
தலைவனடங் கண்டார்க ளரவமெனுந் தவமுனியுங்
கொலைதவிரும் புலியென்னுங் குலமுனியு மானுரோ. (௬௧௧)

மீனேறுங் கொடித்தென்னன் விழிக்கேற விரைதுரகந்
தானேறு வதுகண்டு தருங்கலைபொற் செண்டேறத்
தேனேறு மலர்க்கொன்றைத் திருமுடிமேன் மண்ணேற
யானேறுஞ் சிவபதமு மெனக்கேற வின்றுது. (௬௧௨)

பொன்னுலகத் துள்ளோரும் புரந்தரனுந் திருமாலும்
மன்னுமறைக் குரியோனும் வழியடிமைத் தொழில்செய்ய
அன்னைதனக் காளாகி யணிவைகை யடைத்தடியுண்
டென்னை யருட்பணிகொள்ள விசைந்தனையோ விறையோனே. ()

கட்டுமரைத் துணிச்சீரைக் கச்சையுமத் திருத்தோளிற்
கொட்டுமுடித் தலைமீது கவித்தவொரு கூடையுமாய்ப்
பிட்டிடுநற் றவமுடையாள் பின்புவருந் திருக்கோலம்
இட்டமுறத் தொழும்படிநான் கண்டிலனே யிறையோனே. (௬௧௪)

தாரூருஞ் சடைமுடியாய் தவம்பெரிது முயன்றவர்கள்
நீரூரும் புகழ்வைகை நெடுங்கரைமே னின்றுரோ
சீரூருங் கனகமுடித் தென்னவனோ மதுரையெனும்
பேரூரி லிருப்பவரோ பிட்டமுதிட் டருள்வாளோ. (௬௧௫)

பொன்மௌலித் தலைமீது புண்ணியர்மண் சுமந்தேறுங்
கொன்மலியுங் கோலறையுங் குளிர்வைகைப் போராறுங்
கன்மமெனும் பகைநீங்கக் கண்ணுதல்வெம் பரியேறுந்
தென்மதுரை மூதூரு மல்லவோ சிவலோகம். (ருகசு)

இன்னவகை யன்புடையா ரிரங்கினரா யிடைவைகைத்
துன்னுதிரைப் போராறுந் தொலையவடிந் ததுபின்னர்த்
தென்னவனுஞ் சிவன்செயலா மெனத்தெளிந்து வாதவூர்
மன்னவர்தம் பால்வந்து வணங்கியிது கூறுவான். (ருகஎ)

அந்தரர்தம் பதியினிழிந் தருள்புனைமாத் தியர்குலத்தில்
வந்தருளித் தமியேற்கு மந்திரியாய் மகிழ்வெய்தி
எந்தைவயப் பரியேறல் காட்டியெனக் கொழியாத
பந்தமறத் திருவுள்ளம் பற்றினைநற் றவத்தோனே. (ருகஅ)

கருமாளத் திருமேனி காட்டினனென் றுணராதே
திருமாலுங் *காண்பரியான் றேவருடன் பரியேறி
வருமாயச் சூழலினு லழுக்காடை யண்டர்தொழும்
பெருமானுக் களித்தேனென் பிழைசெய்தேன் பெரியோனே. ()

அப்பணிசெஞ் சடையானை யரும்பரிமே லாளாக்கும் [டிச்
மெய்ப்பொருளென் றுணராமல் வெய்யவினைப் பொருள்வேண்
செப்பருமித் தறுகண்மை செய்வித்தேன் சிறுமையுளேன்
எப்பிழையும் பொறுத்தருளா யானரகிற் புகுதாமல். (ருஉ0)

தூநாக மணிந்தபிரான் றுங்கமிகும் பரியேறிப்
பூநாறுஞ் சடைமேன்மண் சுமந்தபுகழ் போதாதோ
யானுநின் பணியே செய்தொழுக விவ்வுலகந்
தானுள வேண்டுமினி யென்றிரந்தான் றமிழ்மாறன். (ருஉக)

---

* பாவரியான் என்றும் பாடம்.

## வேறு.

வன்றிறன் மன்ன னிவ்வா றிரத்தலும் வாத வூரர்
தென்றிசை புரக்கு நீதித் தென்னவன் றன்னை நோக்கிப்
பின்றிகழ் சடையான் மன்னும் பெருந்துறை நகரி லேக
இன்றெனை விடுப்ப தேமற் றிவ்வுல களிப்ப தென்றார். (௩௨௨)

தென்புலத் தலைவன் றானுஞ் சிந்தையி னெந்து முன்னோன்
அன்பருக் கரசர் வாழ்வி லாசையிங் குளதோ வென்று
மென்பதத் திறைஞ்சி யையா வேண்டிய செய்க வென்று
தன்புகழ்க் கூடன் மூதூர் புகுந்தனன் றானை சூழ. (௩௨௩)

சற்றவத் தொழில்செய் யாத தானைமன் போன பின்னர்
அற்றவர்க் கற்ற சோதி யருட்பெரு வாழ்வு வேண்டிக்
கொற்றவர்க் குற்ற கோலங் குறையென நீத்து மேலாம்
நற்றவக் கோலங் கொண்டார் நம்பனுக் கன்பு மிக்கார். (௩௨௪)

அத்தனை யால வாயி லண்ணலை யிறைஞ்சி யந்த
*மைத்திகழ் சோலை நீடு மதுரையம் பதியை நீங்கி
வித்தகர் தம்மை யாண்ட மேனிகண் டிறைஞ்ச வேண்டும்
பித்தினர் கடிது சென்றார் பெருந்துறை பொருந்த வெண்ணி. ()

மிடைகெட வைத்த பாத வித்தக ரூரை நோக்கி
நடையிடு மெல்லை தன்னி னன்மன விரைவுங் காற்றுந்
தடைபடு கன்றை நாடுங் கபிலையுந் ததும்பி நின்று
†மடையிடை யுடைக்கு நீரு மாயினர் வாத வூரர். (௩௨௬)

கண்ணுழை யாத கானும் பதிகளுங் கடிது நீங்கி
எண்ணறு முனிவர் மேவு மெழிற்பெருந் துறையி லெய்திப்
புண்ணிய வினத்தர் சூழ முன்புபோ லிருந்த போதில்
விண்ணவ ரதிபன்பொற்றாள் வீழ்ந்திது தாழ்ந்து சொல்வார். ()

---

* மைத்தவழ் என்றும் பாடந்தரம்.
† மடையினை என்றும் பாடம்.

தீண்டுதற் கரிய மார்பிற் சேயிழை தனத்தி னாலும்
ஈண்டொரு மாற்றி னாலு மெய்திய தழும்ப போற்றி
வேண்டிய வடிவ மாகி வெம்பரி மேற்கொண் டெம்மை
ஆண்டருள் செய்ய வந்த வண்ணலே போற்றி போற்றி. (௯௨௮)

அண்டருக் கரியாய் போற்றி யடியவர்க் கெளியாய் போற்றி
வண்டமிழ்ப் பாண்டி நாடு வாழமண் சுமந்தாய் போற்றி
கண்டனக் கினிய மேனி காட்டியென் சென்னி மீது
முண்டகத் திருத்தாள் வைத்த முத்தனே போற்றி போற்றி. (௯௨௯)

போற்றியென் றின்ன வாறு புகன்றவர் முடிமேற் செங்கை
ஏற்றியங் கினிய கூறி யெழுகென வெழுந்த பின்னர்
நீற்றையும் புனைந்து ஞான நிறையருட் பார்வை நல்கி
வீற்றிருந் தன்பர் கூட்டம் விளங்கினர் களங்க மில்லார். (௯௩௰)

அந்தமு முதலு மில்லா ரடியவர் தம்மை நாடி
வந்துள கரும மெல்லா முடித்தன மகிழ்ச்சி கூர
நந்திகழ் வடிவங் காண வேண்டிநற் கயிலை யுள்ளார்
சிந்தனை செய்தார் வல்லே யாண்டுநாஞ் சேறல் வேண்டும். (௯௩௧)

வாழ்ந்திரு மின்பின் யாமு மேகுவ மென்ன வந்து
சூழ்ந்தரு ளுருவா மன்பர் தோத்திரம் பலவுஞ் செய்து
தாழ்ந்தெதி ரிறைஞ்சி யையா தரிப்பரி தென்று மண்மேல்
வீழ்ந்தயர்ந் தழுதா ரெம்மை விடுதியோ வென்று நொந்தார். (௯௩௨)

பரிந்தழு மடியார் தம்மேற் பரமனு மன்பு பூண்டு
வருந்துவ தொழிமி னிந்த மணமலி குருந்த நீழற்
பொருந்திய தெய்வ பீடம் பொலிவொடு குயிற்றி மீதே
திருந்திய மறையுந் தேடு நமபத மாகச் செய்து. (௯௩௩)

தாங்கரு மரந்தை நீங்கி யாமெனுந் தன்மை கண்டு
நீங்கரு மன்பி னாலே நித்தலு நயந்தி றைஞ்சி
ஈங்கருண் மனத்த ரெல்லா மமர்ந்திரு மொருநா ளிந்தத்
தீங்ககல் பொய்கை யூடு செழுந்தழல் வந்து தோன்றும். (௯௩௪)

எழுந்தழல் விளைந்த போதில் யாவருந் தடத்தி னூடு
விழுந்துபின் னெய்தி நம்பால் விடுகநுங் கவற்சி யென்று
தொழுந்தவ மியற்றுந் தொண்டர் சூழ்ந்துபின் செல்ல மெல்லச்
செழுந்திருக் கயிலை நாடிச் சென்றனர் தில்லை நாதர். (௯௫)

நீங்கரு மன்ப ரெல்லா நில்லுமி னென்று கூற
ஆங்கவ ரிறைஞ்சி யெந்நா ளையநிற் காண்ப தென்று
தாங்கரு மயக்க மெய்தித் தாயகன் மகவு போலப்
பூங்கழல் வணங்கி நின்றார் போயினர் மாயை வல்லார். (௯௬)

இங்கிவர் நின்ற பின்னு மின்னருள் வாத வூரர்
தங்கிளை வாழ வந்த தலைவர்பின் சென்ற போதிற்
பொங்கிள முலையாள் பாகர் புரிந்திவர் வரவு காணு
அங்கொரு கொன்றை நீழ லிருந்தன ரரந்தை நீக்க. (௯௭)

தன்புடைக் கவடு கொண்டோர் தடங்கிரி நிரந்த மாலை
பொன்படைத் தனைய கொன்றை பொலிவுற விருந்த போதின்
மென்பதத் திறைஞ்சிக் கண்ணீர் விழவிழத் தொழுது நிற்கும்
அன்பரைப் பரிவா லைய ரருளுவைத் தருளிச் செய்வார். (௯௮)

அவ்விய மில்லார் தங்கட் கருடர முன்னு மன்னுந்
திவ்விய தலமா மிந்தச் சிறந்துள குருந்த நீழல்
எவ்வுல கெங்கு முள்ளோ மாயினு மிங்கு ளோர்கள்
வெவ்வினை யகற்றி யாள வேண்டியீண் டுறைவோ மென்றும். ()

பொங்கொளிச் சுழுனை யூடு புலம்பிசைக் குறியே யான
மங்கல சங்க மல்லால் வாய்ந்தபல் லியங்கள் யாவும்
இங்கெமக் காகா வோசை யடங்கிட மாத லாலும்
நங்குலக் கவுரி காணு நடமில தாத லாலும். (௯௪௰)

ஒழுங்குட னின்ன வாறிங் குணர்ந்துநற் குருந்த நீழற்
செழுந்தவக் குழுவி னீயு நங்கழல் சேவை செய்தே
எழுங்கனன் மடுவிற் காணில் யாவரு மதனிற் சென்று
விழும்பொழு துடன்வீ ழாம லவ்வுழை விரைவி னீங்கி. (௯௪௧)

உத்தர கோச மங்கை யென்னுநம் மூரிற் சென்று
சித்தியங் கெவையு மெய்தித் தெய்விக லிங்க மேனி
வைத்தநம் பதிக டம்மி லிவையிவை வணங்கி லங்கே
இத்திகழ் வடிவே காண்டி காட்டுது மெனவி யம்பி. (௫௪௨)

இந்நகர் வணங்கி நீங்கி யெழுங்கழுக் குன்ற மென்னும்
அந்நெடும் பதியி றைஞ்சி யாண்டுநின் றீண்டுப் போந்து
பொன்னினம் பலத்தி லெய்திப் புத்தரை வாதில் வென்ற
பின்னரெம் பதமே யான பெரும்பதம் பெறுதி யென்றார். (௫௪௩

மன்னுமன் புடையார் தெய்வ வாசகம் புகலு மாறும்
பன்னகம் புனைவோன் மேவும் பதிபல வணங்கு மாறும்
பொன்னினம் பலத்தி லெய்திப் புத்தரை வென்று மன்றன்
தன்னருங் கமல பாதஞ் சார்தலும் பகர்த லுற்றும். (௫௪௪)

மண்சுமந்தசருக்கம் முற்றிற்று.

இச் சருக்கத் திருவிருத்தம் - கூ௫.

---

# திருவம்பலச்சருக்கம்.

வரந்தர விருந்தார் தம்மை வாதவூ ரிறைவர் போற்றிப்
பெருந்துறை நகரி லன்றிப் பிஞ்ஞகா புலியூர் மன்றிற்
பொருந்துவை முத்தி யென்று புகன்றதிங் கெவனோ வென்னத்
திருந்திய தவத்தாய் கேட்டி யென்றவர் செப்ப லுற்றார். (௫௪௫)

இத்தலத் திடையே வீட மெடுத்துள விடத்தி லன்றி
வைத்துள விடத்தே யந்த வேட்டுவன் வடிவங் கொள்ளும்
வித்தக வுனக்கிங் கன்பான் மெய்யுணர் வுரைத்தே மேன்மை
ஒத்திடுஞ் சிவாநு பூதி முத்தியம் பலத்தி லுண்டாம். (௫௪௬)

இடம்படு முடம்பின் மூலத் தெழுந்தநற் சுழுனை நாடி
உடன்கிளை ரொளியே யாகி யொளியிலஞ் செழுத்து மொன்றாய்
நெடுங்குழ லோசை யாகி நிலவுமவ் வோசை போயங்
கடங்கிய விடமே யென்று மாடுமம் பலம தாகும். (ருசஎ)

எண்டரும் பூத மைந்து மெய்திய நாடி மூன்றும்
மண்டல மூன்று மாகி மன்னிய புணர்ப்பி னாலே
பிண்டமு மண்ட மாகும் பிரமனோ டைவ ராகக்
கண்டவர் நின்ற வாறு மிரண்டினுங் காண லாமே. (ருசஅ)

ஆதலா லிந்த வண்டத் தறிவரும் பொருளா யென்றுந்
தீதிலா மூல நாடிற் றிகழ்சிவ லிங்க மேனி
மீதிலா மந்த நாத வெளியின்மே லொளிமன் றங்குக்
காதலான் மடவாள் காணக் கருத்துற நிருத்தஞ் செய்வேம். (ருசகூ)

அந்தநன் னடமே தென்னி லைந்தொழி னிகழ்த்த லாகும்
பந்தம தகற்று மிந்தப் படிவமு மதுவே யாகும்
வந்துல கத்தில் யாருங் காண்பரேல் வழுவா முத்தி
தந்தரு ளளிக்குந் தெய்வத் தலமுமத் தலமே யாகும். (ருரு0)

தாவரும் பணில நேமி தரிப்பவர் பிரம ரென்போர்
யாவரும் புலிபாம் பென்னு மிருவரும் புரத்தி லுள்ளார்
மூவருந் தெய்வ மூவா யிரவரு முனிவர் தாமுந்
தேவருந் தொழுது போற்று மெல்லையத் தில்லை மூதூர். (ருருக)

மற்றிவை தெளிவா யென்று பணிந்தெதிர் வணங்கி நிற்பார்
நெற்றியி னீறு சாத்தி நிற்றியென் றகல நில்லார்
சற்றிடஞ் சென்றார் பின்னு மிங்கிவர் தன்மை கண்டு
கற்றையஞ் சடையார் நின்று கண்ணருள் செய்து போந்து. (ருருஉ)

கண்ணெதிர் நடக்கு மாறு கண்டுளங் களித்து நிற்கும்
புண்ணியர் காண முன்னர் மறைந்தனர் புலியூ ரையர்
துண்ணென விரக்க மெய்தித் தொழுதுகை தலைமேற் கொண்டு
நண்ணரு மன்பர் கூட்ட நணுகினர் வாத வூரர். (ருருரு)

அருந்தவ மகலா நெஞ்சத் தன்பருந் தாமு மந்தத்
திருந்திய குருந்தின் கீழோர் தெய்வவீ டிகையுஞ் செய்து
வரந்தரு செய்ய பாத மலர்வகுத் திறைஞ்சி யாங்கே
இருந்தன ரிருந்த நாளி லெய்திய தியம்ப லுற்றும். (௬௫௪)

வெண்பிறை முடித்த வேணி விண்ணவ னன்பி லாத
பண்பின ரெளினுந் தன்னைப் பாடினர்க் *கிரங்கு மென்றே
எண்பெறு நமச்சி வாய வாழ்கவென் றெடுத்து நாதன்
வண்பதம் புகழ்ந்து ஞான வாசகம் புகல லுற்றார். (௬௫௫)

சொற்பதங் கடந்து நின்ற சோதிவந் தருளை நல்கும்
அற்புத மறியே னென்று மதிசயங் கண்டா மென்றும்
எற்பொலி சடையாய் நெஞ்சங் குழைத்தனை யென்னை யென்றுஞ்
சிற்பரன் றனது பாதஞ் சென்னியின் மன்னு மென்றும். (௬௫௬)

ஐயனே நின்னைக் காண வாசைப்பட் டேனு னென்றும்
உய்கிலேன் வாழே னென்று முனக்கடைக் கலமே யென்றுஞ்
செய்யுமா றறியே னந்தோ செத்திலே னென்றும் பொய்யர்
பொய்யனே நின்பொற் பாதம் புணருநா ளெந்நா ளென்றும். ()

ஆதரித் தழைக்கி லிங்கே யதெந்துவென் றருளா யென்றும்
போதமிக் குடைய பாட லிவையிவை புகன்ற பின்னர்
மாதிரத் தெவரும் போற்ற வருந்திரு வார்த்தை யெண்ணந்
தீதறச் சிறந்த வெண்பாத் திகழெழு நான்கு மோதி. (௬௫௮)

இயல்புடன் மொழியும் பள்ளி யெழுச்சி யேசறவு நெஞ்சத்
தயர்வற வுரைக்கு மின்னே ரனையபூங் கழல்க ளென்றும்
உயிருணி யெனுநற் செய்யுள் பிரார்த்தனை யோங்கு நீதி
வியனெடுங் கூடற் பாண்டி விருத்தமெய்த் தமிழுங் கூறி. (௬௫௯)

---

* இரங்குவாரென் என்றும் பாடம்.

## வே று.

மருவுந் தொண்டருடன் கூடி வைகிச் சிலநாட் செல்லழுதற், பரமன் சொல்லும் படியேபின் பயிலும் பொய்கைத் தழல்கண்டு, கருதுந் திருவஞ் செழுத்தோதிக் காணக் கிளருங் கனன்மீது, விர வும் பேரன் புடையார்க ளெல்லாஞ் சென்று வீழ்ந்தார்கள். (ருருய)

வீழ்ந்த போதிற் புலியூரர் விடைமே லேறிக் கவுரியுடன், சூழ்ந்தங் கிமையோர் மலர்சிந்தித் தொழவிண் ணிடையே தோன்று தலும், ஆழ்ந்த தடத்துட் கனன்மூழ்கு மன்ப ரடங்கத் துயர் நீங்கி, வாழ்ந்து வணங்கிக் கணநாதர் வடிவாய்த் திருமுன் வந்தார்கள். ()

துரியத் தலையிற் பயில்வாருந் தொழுதங் கெழுவார் முகநாடி
ஒருசற் றகலா தமர்நீரிங் கொழியத் தனிநா மெய்தியதுங்
கரையிற் றிரைபோய் விழவீசுங் கழுநீர் வாசங் கமழ்வாவி
எரியிற் புகுவீ ரென்றதுவும் யாதோ வெனினிங் கிதுவாகும். (ருருஉ)

## வே று.

உத்தம னென்னூர் திருவாத வூரனை மன்னும் புலியூரிற்
புத்தரை வெல்லும் படிநாமப் புவிமிசை வைத்தோம் யாமேகிற்
சித்த மயர்ந்தே துயர்கூருஞ் செய்திய னுமென் பதுதோரா
இத்தல மீதே சிவனுளிங் கெம்முடன் வாரா திருமென்றோம். ()

மலமகல் பவரும் புவிமீதே மானுட வடிவந் தனையெய்திச்
சிலபக லெனினும் பயில்காலைச் சேர்தரு மலவா தனையென்றே
பலமலர் கமழுந் தடமீதிற் பரவரு ஞானத் தழல்சேர்வித்
திலதென நீடுஞ் சடம்வேவித் திவ்வுட லீந்தோ மிந்நாளில். (ருருச)

என்று விளம்பிக் கணநாத ரெங்கணு மல்கப் புலியூரின், மன்று விளங்கப் பயில்வாரும் வானின் மறைந்தா ரவ்வெல்லைத், துன்றிய ஞானச் சிவநாமச் சொற்றமிழ் வல்லார் வேறாகச், சென் றொரு கொன்றைச் செழுநீழற் றிகழ விருந்தார் சிவயோகம். (ருருரு)

அன்ப ரழற்கே புகுமாறு மையர் விடைக்கே வருமாறும், முன்பு தமக்கா முருவெய்தி முன்னவ னற்ற டொழு மாறும், பொன்பொது விற்கே யன்பாளர் புகுவது மெல்லா மொருகா லத், தின்புறு மெய்ப்போ தகயோகத் தியல்பொடு கண்டா ரென் செய்தார். (௩சுசு)

செங்கை குவித்தார் விழிநீரைச் சிந்தின ரெந்தாய் வந்தாய் பின், எங்க ளொளித்தா யெனமாலுற் றெய்தினர் பொய்கைக் கரைமீதே, கங்கை முடித்தார் விடையேறிக் கண்ணுறுற நண்ணுந் தலமோவென், றங்க ணிலத்தே போய்வீழ்வுற் றழுதழு தந்தோ வென *நொந்தார். (௩சுஎ)

## வேறு.

அன்னை நிகர்ப்பீ ரென்னை யொழித்தே யன்பாளர்
பொன்னடி பெற்றே பொய்கை யழற்கே புகலாமோ
பின்னுரு வத்திர் நம்மருள் கூடா வினையேனுக்
கின்ன லளித்தீ ரெங்க ளொளித்தீ ரெனநொந்தார். (௩சுஅ)

## வேறு.

அந்நிலை தெளிந்து பொய்கை யகன்றுயர் குருந்த நீழற்
பன்னரு மறைகள் காணாப் பதமலர் பற்றி வீழ்ந்து
மன்னிய நிலத்தி னுள்ளார் வல்வினைப் பிறவி மாள
இன்னருட் சதக மெய்தா னரும்பியென் றெடுத்துச் சொன்னார். ()

இத்திறங் கூறி யாங்கே புலம்பிநின் றிங்கு மெல்லை
நித்தனன் றுரைத்த நீர்மை நெஞ்சினு ணினைந்து பின்னர்
அத்தலத் திறைஞ்சி யெங்கோ னருட்பெரு விடைபெற் றேகி
உத்தர கோச மங்கை யூரினிற் சென்று புக்கார். (௩எ௰)

---

* நைந்தார் என்றும் பாடம்.

சடையவர் கோயி லெய்தித் தம்மைவந் தடிமைகொண்ட
வடிவது காணா ராகி மயங்கிமெய் துயிர்த்து வீழ்ந்து
விடுதிகொ லென்னை யென்று நீத்தல்விண் ணப்ப மென்னுந்
தொடைகெழு பாட லோதக் காட்டினர் தொல்லை மேனி. (௩௭௧)

கன்னலை யமுதை யங்கே கண்டுகொண் டிறைஞ்சிச் சின்னாள்
அந்நக ரிருந்து தங்கோ னருண்மொழிப் படியே சென்று
தந்நிக ரில்லாத் தெய்வத் தலம்பல வணங்கி நீங்கிச்
சென்னிநன் னாட்டி லெய்தித் திருவிடை மருதூர் சேர்ந்தார். ( )

அப்பதி தொழுத பின்ன ரன்புட னாரூ ரெய்திச்
செப்பரு மலர்த்தாள் போற்றித் திகழ்திருப் புலம்ப லோதி
எய்ப்பற விறைஞ்சி யண்ண லியம்பிய பதிக ளெல்லாந்
தப்பற வணங்கி நீங்கித் தடமதிற் புகலி சார்ந்தார். (௩௭௩)

குன்றென வயங்கு கோயிற் கோபுர வாயி னீங்கிச்
சென்றுயர் கயிலை யான செய்திகண் டிறைஞ்சு மெல்லை
மன்றிடை நடித்த பாத மலரடி பிடித்துக் கொண்டு
பின்றிகழ் சடையோன் முன்னர்ப் பிடித்தபத் தருளிச்செய்தார். ( )

தொல்வினைப் பகைமை யுள்ளார் யாவருந் தொழுதா லிங்கு
வெல்வரப் பகையை யென்று விருப்புடன் சிலநாள் வைகி
மல்குமத் தலத்தை நீங்கி வண்கழுக் குன்றி லன்பாற்
செல்வதற் கிசைந்து தில்லைத் திசைகுறித் திறைஞ்சி யேகி. (௩௭௫)

## வேறு.

உத்தர நெடுந்திசையி லேகியொளி குன்றா
முத்தநதி சூழுமுது குன்றினை வணங்கி
அத்தல மகன்றுய ரருட்டுறையி தென்றே
மெய்த்தவர்க ளெண்ணியுறை வெண்ணெயி லடைந்தார். (௩௭௬)

அந்நகர் வணங்கியபி னன்புட னகன்றே
நன்னர்வழி சென்றுநடு நாடுமுயர் காடுங்
கொன்னிப மடங்கலுறை குன்றமு மிகந்தே
மன்னுமரு ணைபுரி மருங்கணைய வந்தார். (௬௭௭)

மாடமொடு கோபுரமு மன்னுமணி முத்தம்
சூடுமதி லும்பெரிய தோரண முகப்பும்
நீடுகமு காடவி நெருங்கியுள தண்கா
ஊடுயர்தல் கண்டுவகை கொண்டுதொழு துய்ந்தார். (௬௭அ)

அன்றிருவர் தேடவழ லானதொரு வெற்பாய்
நின்றவடி வோமன நிறைந்தபெரு வாழ்வோ
என்றுமலை யண்ணலை யிறைஞ்சியருள் கொண்டே
சென்றருணை யாகிய செழும்பதி புகுந்தார். (௬௭௯)

வேறு.

சோலையு மதிலும் பல்பூந் தோரண மறுகுந் தெய்வ
சாலைகள் பலவு நீங்கிச் சந்நிதி மறுகிற் சென்று
மாலையு *மதியும் பாம்பு மத்தமு முடியில் வைத்தோன்
ஆலய மிறைஞ்சிக் கண்டார் தம்மையன் றுண்ட மேனி. (௬அ௦)

மாலுடன் பிரமன் றேவர் வந்துனக் †கபய மென்றென்
றோலிடும் பொழுதி லால முண்டிருள் கண்ட போற்றி
மேலிடும் பவநோய் தீர விண்ணவர் மண்ணோர் பச்சைப்
பாலுடன் கலந்துட் கொள்ளும் பனிமலை மருந்தே போற்றி. ()

நெடியவன் கேழ லாகி நீணில மகழ்ந்துங் காணா
அடிகளென் றலைமேல் வைத்த வருட்பெருங் கடலே போற்றி
படியிடம் புரக்கு முண்ணா முலையெனும் பச்சை மேனிக்
கொடியிடங் கொண்ட செம்பொற் குன்றமே போற்றி போற்றி. ()

---

* பாம்புந் திங்கள் என்றும் பாடம்.

† கடிமை யென்றென் என்றும் பாடம்.

வென்றிடுங் கன்னி மேதிச் சென்னிவிக் கிரமன் றன்னைக்
கொன்றதன் பாவந் தீரக் குறித்திட வருள்வாய் போற்றி
அன்றுவந் தென்னை யாளு மணியணு மலையாய் போற்றி
என்றுதம் பரிவா லேத்தி யிறைஞ்சியங் குறையு நாளில். (௩அ௩)

மாதர் கொண் மாத ரெல்லா மார்கழித் திங்க டன்னில்
ஆதிரை நாண்முன் னீரைந் தாகிய தினங்க டம்மின்
மேதகு மனைக டோறு மழைத்திருள் விடிவ தான
போதிவர் தம்மிற் கூடிப் புனற்றட மாடல் செய்வார். (௩அ௪)

அன்னவ ரியல்பு கண்டா ராங்கவர் புகன்ற தாக
மன்னிய திருவெம் பாவை வாசகம் பேசிப் பின்னர்க்
கன்னியர் பாடி யாடுங் கவின்கொளம் மனைகண் டன்னோர்
பன்னிய பாட லாக வம்மனைப் பாடல் செய்தார். (௩அ௫)

விரவுமன் புடையா ரந்த மேதகு தலத்தை நீங்கிப்
பரிவுடன் கச்சி யேகாம் பரந்தனிற் பரனை யேத்தித்
தெரிவருங் காமக் கோட்டி சீறடி வணங்கித் தேவர்
வரநினைந் திறைஞ்சுந் தெய்வ வண்கழுக் குன்றிற் சென்றார். ()

கோட்டிதழ் கமழுங் கொன்றைச் சென்னியன் குலவு மன்பர்
சூட்டிய மலர்த்தாள் போற்றித் துணைவநின் செய்ய மேனி
காட்டினை கலங்கா வண்ண மிக்கழுக் குன்றி லென்று
பாட்டினைப் பொழிந்து சின்னாட் பயின்றுபின் பணிந்து போந்தார்.

அத்தல முதலா நாப்ப ணடைந்துள பதியுங் கானும்
மைத்தடங் கிரியுங் காவும் வாவியு நதியு நீங்கிப்
பைத்தவெம் பாம்பொ டாடி நரியெலாம் பரிக ளாக்குஞ்
சித்தர்தென் றில்லை மூன்று காவத மென்னச் சென்றார். (௩அஅ)

## வேறு.

தூமூரன் மடப்பாவையர் தோளாசையி லாளாம்
மாமூகரு மிட்டுண்டுயிர் வாழாதவர் தாமுந்
தீமூள்கர வான்மேலருள் செய்யாதவர் பலரும்
போமூர்வழி போகாதவர் புலியூர்வழி போனார். (௯௯)

செல்லுஞ்சுர மிருபாலொளி திகழ்கொன்றைகண் மலரா
எல்லொன்றிய விமையோருல கெனநின்றன வெங்கும்
புல்லுஞ்சிவ ஞானத்தமிழ் போல்வண்டிசை பாடச்
சொல்லும்பொருள் வல்லார்தம னைபோன்றன தோன்றி. (௧௦௦)

தெள்ளுஞ்சிவ ஞானஞ்சிறி தில்லார்தவ வேடங்
கொள்ளுஞ்செய லெனவொண்மலர் குலவுங்கவி ரெல்லாம்
பள்ளம்படர் புனல்போற்புலன் வழியேபயில் சிறியோர்
உள்ளந்தமை யொக்குந்திகழ் மைக்கொண்டொளிர் காயா. (௧௦௧)

பாயுங்குல மந்தித்திரள் பயிலுந்தொறு மசையா
ஈயின்குழு வெழுதேனி னிறால்சேர் மலர்நாகம்
ஆயந்திகழ் தாராகண மகல்வான்மிளிர் மதியம்
ஏயும்படி கிளர்பொங்கரி னிடைநின்றன வெங்கும். (௧௦௨)

பக்கங்கிளர் கமுகின்றிரள் பலசாமரை வீசக்
கொக்கின்றனிர் கோதும்பல குயில்காகள மூதத்
தொக்கன்பொடு விண்ணோதிபர் சொரியும்பல பொற்பூ
ஒக்கும்படி மலர்சிந்தின வொண்சண்பகச் சோலை. (௧௦௩)

நீங்காவள மிவ்வாறுள நீள்சூத நரந்தந்
தேங்காரளி முரல்பாதிரி தெங்கின்றிரள் வகுளங்
கோங்காசினி கொந்தார்செழு மந்தார நெருங்கும்
பூங்காவை யகன்றார்புலி யூர்நன்னகர் கண்டார். (௧௦௪)

சேணொன்றிய மதிலும்பணி திகழ்கோபுர நிரையுஞ்
சோணந்தரு கும்பங்கிளர் துணைமாளிகை பலவுங்
காணுந்தொறு மெழில்செய்வது கண்டஞ்சலி கொண்டே
பூணுந்திரு வருளன்பர் புகழ்ந்தாருண மகிழ்ந்தார். (௫௯௫)

வேதந்தரு மொலியுந்தொழும் விண்ணோர்தம தொலியுங்
கீதந்தரு மொலியுங்கிளர் முழவங்களி னொலியும்
போதந்தரு சிவஞானிகள் புகலாகம வொலியும்
ஓதுந்தமி ழொலியுங்கட லொலிசெய்தன புலியூர். (௫௯௬)

நிரையொன்றிய மணிமாளிகை நெடுவீதிக ளகலா
வரையொன்றிய வுயர்கோபுர மணிவாயில் புகுந்தே
உரையொன்றிய சிவஞான முரைக்குஞ்சிவ நன்னூற்
கரைகண்டவர் மணிமன்றெதிர் கண்டாரருள் கொண்டார். (௫௯௭)

பொன்னார்பொது நின்றாடிய புனிதன்றனை முடிமேல்
அந்நாளடி வைக்கும்பா ருகும்படி கண்டார்
மன்னாவுயி ரன்னாய்மணி மன்றா சரணென்றே
சொன்னார்பல காலன்பொடு தொழுதார்மிக வழுதார். (௫௯௮)

விண்டேயிரு கண்ணீர்விழ வீழ்ந்தின்னடி முடிமேற்
கொண்டேபி னெழுந்தன்பொடு குறையாவரு ணிறையா
வண்டேர்குழ லுமைபங்கனை வண்டில்லையு ளின்னே
கண்டேனென நற்பாடல் கருத்தார வுரைத்தார். (௫௯௯)

குன்றாவருண் மூலந்திகழ் குறியாகிய சுடரும்
மன்றாகிய வெளியூடு மகிழ்ந்தாடிய வொளியும்
ஒன்றாகிய வநுபூதியி லுற்றார்செய லற்றார்
நின்றாரசை வில்லாவொரு நிலையோவிய மானார். (௬௱)

மைகால்குழ லுமைபங்கினன் வழிபாடு மறந்தே
கைகாலசை விலவாயின கண்ணுஞ்சிறி திமையா
செய்காரிய மென்னோவிது தெருளாமரு ளென்னா
மெய்காவலர் மணிமன்றை விடப் போமினி யென்றார். (௬௱௧)

## வேறு.

பூண்டருள் கொண்ட காவல் புரிபவ ருரைத்தல் கேளார்
தாண்டவ நிகழு ஞானத் தன்மையின் றன்மை நாடிக்
காண்டகு துரியா தீதக் கழிபரத் தொளியின் மூழ்கி
நீண்டதோர் தம்ப மாகி நின்றனர் நெடிது போது. (சாஉ)

போமெனப் போகா ரொன்றும் புகல்கிலர் பித்தங் கொண்டார்
ஆமெனக் காவ லாள ரஞ்சிநின் றிரங்கு மெல்லை
சாமுடற் குயிர்வந் தெய்துந் தன்மைபோற் குவிந்த கஞ்சத்
தேமலர்க் கரமேற் கொண்டு சிவசிவ போற்றி யென்றார். (சாங)

முன்னவன் செம்பொன் மன்றை மும்முறை வலங்கொண் டங்குத்
தன்னிக ரில்லா மூலத் தலைவனை வணங்கிப் பின்னர்
அன்னையம் பிகைதன் பாத மன்புட னிறைஞ்சி யந்தப்
பொன்னவிர் கோயின் மேல்பாற் புலீச்சுரஞ் சென்று சேர்ந்து. ()

வரந்தரு விருந்த நாதன்* மலரடி வணங்கி நாகேச்
சரந்தனி லிருந்த வண்ண றன்பத மிறைஞ்சி நீங்கித்
திருந்திய மறையோர் வாழுந் தில்லையம் பலஞ்சூழ் வீதி
பொருந்துழி யமிர்த மான வாசகம் புகல லுற்றார். (சாரு)

ஆடுமிக் குலாநற் றில்லை யாண்டவன் றனைக்கொண் டென்னும்
பாடலைப் புகன்று கோயி லிருவகைப் பதிகங் கூறி
நாடுமச் சிவபு ராண மொழிந்தநல் லகவன் மூன்று
நீடுமெய்த் தமிழு மன்பா லோதினர் நீதி மிக்கார். (சாசு)

கைவளை சிலம்பச் செம்பொற் கிங்கிணி கறங்கச் சூழ்ந்து
மைவளர் குழன்மேல் வண்டு மருண்டிசை திரண்டு பாட
மெய்வியர் வரும்ப வெம்போர் விழிக்கயல் புரட்டி ஞாங்கர்
இவ்வகை நின்று சுண்ண மிடித்தனர் மடந்தை நல்லார். (சாஎ)

---

* வரந்தர வமர்ந்த நாதன் என்றும் பாடம்.

அத்திரு வனையார் பாடல் கேட்டவ ரிசைத்த தாக
மெய்த்தமி ழுதனு னன்கு மிகுதிருச் சுண்ண மோதி
மைத்திகழ் காவி னூடு வருதலு மாங்கே பொய்தல்
தத்தமின் முயலுங் காதற் சிறுமியர் தம்மைக் கண்டார். (௨௱௮)

கண்டபின் வறிது கூறுங் கட்டுரை சிறிது மற்றெம்
அண்டனை யுரைமி னீரென் றவரவ ருரைத்த தாக
எண்டரு திருத்தெள் ளேணந் திருவுந்தி யெழிற்றோ ணோக்கம்
பண்டிகழ் திருப்பூ வல்லிப் பாடல்பொன் னூசல் சொன்னார். ()

ஆங்கொரு சிறுமி தன்சீ ரன்னையை நோக்கிக் கூறுந்
தாங்கிசை மொழியே யாகத் தருமவை யீரைந் தோதி
ஞாங்கரின் முரலுந் தும்பி தன்னையு நயந்து நாதன்
பூங்கழல் வழுத்து கென்று புனிதர்கோத் தும்பி சொன்னார். ()

பொங்கரி னிடையே வாழும் பொற்பிளங் குயிலே கூவி
இங்கழை யெம்பி ரானை யென்பதுங் கிளியை நோக்கித்
திங்களஞ் சடையான் பாதஞ் செப்பெனத் தசாங்க மென்னுந்
தங்கிசைத் தமிழுஞ் சொன்னார் தந்நிக ரொருவ ரில்லார். (௨௱௧௧)

மண்ணிடத் தெம்மை யாண்ட வடிவினை யன்றி மற்றோர்
அண்ணலைக் கடவு ளென்பார்க் கஞ்சுதும் வினையே மென்றும்
பண்ணுறச் சிறந்த பாடல் பகர்ந்துநற் பன்ன சாலை
ஒண்ணகர்ப் புறம்பு செய்தாங் கிருந்தன ருண்மை மிக்கார். (௨௱௧௨)

பரம்பரப் பொருளா மிந்தப் பைந்தமி ழோதி வையம்
பெரும்பிறப் பகல வந்து பிறந்தவர் செய்தி யெல்லாம்
இருந்தநற் றெருகுதி தோறு மியம்பிநன் மகிழ்ச்சி யெய்தி
அரும்புகழ்த் தில்லை யுள்ளா ரியாவரு மதிச யித்தார். (௨௱௧௩)

தத்துவ முடிவி லாடுந் தாண்டவந் தம்முட் கண்டு
நித்தலுஞ் சென்று மன்றி னிமலனை யிறைஞ்சி யன்பால்
இத்திற மையர் தில்லை யெல்லையி லிருந்தா ரிப்பால்
புத்தரை வாதில் வென்ற புகழினை யுரைத்தல் செய்வாம். (சகச)

திருவம்பலச்சருக்கம் முற்றிற்று.

இச்சருக்கத் திருவிருத்தம் - எ௰.

---

# புத்தரைவாதில்வென்றசருக்கம்.

தாழுநீடு வேணியண்ண றருள்விடாவொர் மாதவன்
ஆழிஞால வண்மையுண்மை யாயுநேய நெஞ்சினன்
சோழநாடு கண்டுதில்லை தொழுதுபின்பு பழுதிலா
ஈழநாடு தன்னைநாட வெண்ணியங்கு நண்ணினன். (சகரு)

நண்ணுமாதி மாதவ னலங்கொளீழ நாடனும்
அண்ணறா னிருந்தவூ ரடைந்துசே ரிடந்தொறும்
எண்ணிலாத காலம்வாழி தில்லைமன்ற மென்றுகூர்
உண்ணிலாவு மன்பினு லுரைக்குமா தொடங்கினன். (சகசு)

சென்றுசே ரிடந்தொறுஞ் சிறந்தசெம்பொ னம்பலம்
என்றுகூறி வைகுநாளி லீழநாடன் முன்புபோய்
நன்றிலாத மூகர்தா நயந்திறைஞ்சி மன்னகேள்
ஒன்றியா முரைத்துமென் றுவந்திவ்வாறு கூறினர். (சகஎ)

ஒற்கமில்தி ருத்தனு மொருத்தனிந் நகர்க்குளான்
நற்கலன்க ளக்குமாலை நாளுமுண்ப தையமே
நிற்கினும்மி ருக்கினு நிலாவுசெம்பொன் மன்றெனுஞ்
சொற்கிளந்து ரைக்குமென்று சொல்லிமுன் வணங்கினர். (சகஅ)

### வேறு.

இன்றிங் கவனைக் கொணர்வீரென் றிசைத்தா னிருப னுங்க வருஞ், சென்றன் புடையாய் வருகவனை யழைத்தான் றிரன்மன் னவனென்ன, நன்றென் பதுவுந் தீதுமின்றி நாளும் பலிபெற் றுண்பதொழிந், தொன்றுங் கருதா ரொடுங்கரும முளதோ வேந் தற் கெனவுரைத்தான். (சகக)

ஊரிற் பலிகொண் டுண்டினுமற் றொன்றுங் கரும மில்லெனி னும், பாரிற் பயில்வா ருயிர்புரத்தல் பரமா கிருபர்க் காதலினால், வேரிக் கமழ்தா ரெம்மரசன் றன்பால் வருதல் வேண்டுமெனச், சீரிற் றிகழ்வேற் றூதருடன் சென்றா னொன்றுந் தீமையிலான். ()

முந்தும் பிடக மூன்றுணர்ந்து செயிர்நான் கொழிந்து முது சீலம், ஐந்தும் புனைந்து பார்மீதே *யாறைந் தடக்கு மியல்புடை யோன், கந்தங் கெடுதன் முத்தியெனக் காட்டுங் குரவ னுடனிருப் பச், சந்தஞ் சிறந்த புயநிருப னிருந்தான் றனை புடைசூழ. (சஉக)

உடுக்குந் தனிவெண் கோவணமு மொளிர்பொக் கணமு மாத்திரையும், எடுக்குஞ் சதங்கை நெடும்பிரம்பு மிலகுந் திலகத் திருமுகமும், அடுக்குஞ் சிறுபுன் முறுவலுநின் றசையுஞ் சடையுங் கண்டரசன், திடுக்கங் கொளவந் தருகாக விருந்தான் றிருவம் பல மென்று. (சஉஉ)

இருக்குந் தலைவன் றனைநோக்கி யிப்போ திருவம் பலமென் றிங், குரைக்குந் தகைமை யெவன்கொலென வுலகாள் பவனுக் கவனுரைப்பான், பெருக்கும் புகழாற் றிகழ்வளவன் பிரியா விரு கட் பேரருளால், புரக்குந் திருநாட் டறந்தழைக்கும் புலியூ ரென்ப தொன்றுளதால். (சஉங)

* பாரமிதை என்றும் பாடம்.

அந்தப் பதிமுன் றில்லைவன மஃதே புவன மனைத்தினுக்கும், முந்தக் கிளருந் தெய்வதல மதனுள் மூலத் தானமதாம், இந்தப் புவிக்கு நாப்பணென விலங்கும் பொதுவா மிடமதனில், சந்தத் தனத்தா ளுமைகாணத் தலைவன் றிருத்தாண் டவம் புரியும்.(சஉச)

மன்னுந் திறலான் மனுமைந்தன் வடிவிற் றெழுநோய் மாற்றிநெடும், பொன்னங் கிரிபோ லுருநல்கும் புனிதத் தட முண் டதின்மூழ்கி, முன்னம் புலிமேற் றவமொன்று முயலா தவரு மைந்துதொழில், என்னுந் திருத்தாண் டவம்புரிதல் கண்டா லுலகி லினிப்பிறவார். (சஉரு)

நண்ணும் பிறவி யொழித்துயிர்க்கு நலஞ்சேர் முத்தி கொடுப் பதற்கிங், கெண்ணுஞ் சமயக் கடவுளரில் யானே வல்ல னெனப் பதமேல், வண்ணந் திகழ்பொற் சழலணிந்து மதுகைக் கொடியுங் கட்டியருட், பெண்ணம் பிகைகண் காணநடஞ் செய்வா னந்தப் பெருந்தருக்கால். (சஉசா)

தேக்குஞ் சடில முடிக்கடவு ளிருதாள் கருதாத் தீமனமும், வாக்குஞ் செயலுங் கொடியோரு மொருகாற் பொன்னம் பல மென்னின், ஆக்கந் தருமஞ் செழுத்திருபத் தோரா யிரத்தோ டறுநூறு, நாக்கொண் டுரைக்கு மதற்குநிக ரென்றான் குன்று நற் புகழான். (சஉஎ)

நீறுந் திருவஞ் செழுத்துமிலா நிருபா திருவம் பலமென்று, கூறும் பொருளிங் கிதுவாகு மென்றான் குன்ற மெனுங் குணத் தான், தேறும் பிடக மூன்றுமுறை செய்யுந் தலைவ னல்லாது, வேறுங் கடவு ளொன்றுளதோ வென்றே புத்தன் வெகுண்டுரைப் பான். (சஉஅ)

சென்றே தில்லை யெனும்பதியிற் சேர்வேன் வாது செய் தவன்றான், நின்றே நடிக்குங் கழலீடு நீடுங் கொடியு மீங்கறுப் பேன், ஒன்றே கடவுள் புத்தனென வுலகோ ரறிய வுரைத்தந்த, மன்றே போதி நிழற்பெருமான், பள்ளி யென்ன வழங்கு விப்பேன்.

இந்தக் கருமந் தினமூன்றில் யானே முடிப்ப னெனவெழுந்து, சந்தச் சிவிகை மேல்கொண்டு தன்றாள் வணங்குங் கணஞ்சூழ, நந்தக் கிளருந் திரைக்கடலு நாடுங் காடு மகன்றேகிப், புந்தித் துயரங் கொண்டொல்லை சென்றான் புத்தன் புலியூரில். (சகய)

## வேறு.

மன்னனுந் தனது செல்வ மகட்குள மூகை நீங்கப்
பொன்னினம் பலத்தி லேக வென்பது பொருந்த வுன்னித்
தன்னெடுந் தானை சூழத் தனிப்பெருஞ் சிவிகை யேறிச்
சென்னிநன் னாடு சேர்ந்து தில்லையி னெல்லை புக்கான். (சகக)

இங்கிவன் செல்லு முன்ன ரெய்திய புத்த னங்கிச்
செங்கரன் றில்லை யெல்லைச் சிவிகையி னிழிந்து சென்று
பொங்குதண் புனல்சேர் சென்னிப் புலீச்சுர வரன்பொற் கோயில்
தங்குசெங் கனக சாலந் தயங்குமண் டபத்தி லானான். (சகஉ)

ஆங்கவ னிருப்பச் சென்ற வரசனு மிறைஞ்சி யேத்தி
ஓங்கிய மகிழ்ச்சி யெய்தி யமர்ந்துழி யுரக ராசி
தாங்கிய சடிலன் கோயி றன்னிலுட் கருமஞ் செய்வோர்
ஈங்கிவர் வரவு கண்டே யாவரு மொருங்கு சேர்ந்தார். (சகங)

## வேறு.

தத்தமன நொந்துகன றானென வெகுண்டே
சித்தமயர் வெய்தும்வகை சின்மொழிகள் கூறா
அத்தனுறை தில்லைதனை யொல்லையி லகன்றே *
புத்தகடி தேகிது பொரேமென வுரைத்தார். (சகச)

தார்வளவன் முன்னருயர் தர்க்கவுரை கொண்டே
நீர்பரவு சைவநிலை யன்றென மறுத்துச்
சீர்மருவு புத்தனுயர் தெய்வமென விப்போ
தேர்பெற நிறுத்தியல தேகுவதி லென்றான். (சகரு)

---

* தில்லைநக ரெல்லையை யகன்றே என்றும் பாடம்.

புத்தனவ னிவ்வகை புகன்றபி னெவர்க்கும்
இத்திற முரைக்குவ மெனக்கடி தகன்றே
மெய்த்தவர்கள் வேதமுத லோர்பரி கரத்தோர்
தத்தமனை தோறுமிது சாற்றினர்க ளன்றோர். (சநசு)

புண்ணுழையும் வேனிகர் புகன்றமொழி கேளா
அண்ணலுறை கோயிலிடை யாவரு மடைந்தே
வண்ணமணி மண்டபம தெய்திவரு புத்தன்
எண்ணமது கேட்குவ மெனக்கடிது சென்றார். (சநஎ)

தெய்வநர ரானவர்கள் * செல்லவெதிர் வாரா
மெய்யுணர்வில் புத்தனை வெகுண்டுபல சொல்லா
உய்வதறி யாதவொரு நீபயமு றாதே
இவ்வகை யிருந்தமதி யாமையெது வென்றார். (சநஅ)

அங்கமறை யாகம புராணமவை யாலே
நுங்கடவு ளேகடவு ளென்றுநுவல் வீரேல்
எங்கடவு ளேகடவு ளென்றுநவில் வேன்யான்
இங்கெனெதிர் கூறுமென வேயவ னிசைத்தான். (சநகூ)

போற்றுமறை யந்தணர்கள் புத்தனை வெகுண்டே
தோற்றனை யெனக்கலைஞர் சொல்லவுனை வெல்வோம்
மாற்றமினி யுன்னுட னுரைக்குமது மற்றோர்
சேற்றினெதிர் கல்லெறிதல் செய்வதல துண்டோ. (சசய)

நன்றிதரு வாருமொரு ஞாளிகுரை செய்தால்
நின்றதன் வெகுட்சியை நிறுத்தல்கட னாமால்
இன்றிழியு நின்னுட னிகழ்ச்சியெனி னுஞ்சீர்
ஒன்றுமிலை யானவுனை யோருரையில் வெல்வோம். (சசக)

மிக்கதிறன் மன்னவரு மெய்யுணர்வி னோருந்
தொக்கசபை முன்னர்நம தர்க்கவுரை சொன்னால்
தக்கதென லாமிது தகாததிது வென்றால்
எக்கலக மும்மிலை யிதேகரும மாமால். (சசஉ)

உத்தர முறைக்கவறி யாதுபுலி யூரர்
புத்தனை முனிந்தனர் புடைத்தனர்க ளென்றே
இத்தல முரைத்துவிடு மென்றுவளா வன்பான்
மெய்த்தவ ரழைத்தெழுது மோலையை விடுத்தார். (௪௪௩)

அந்தணர் பெருந்தவ ரருங்கலை யுணர்ந்தோர்
வந்தணுகு நாளைமணி மன்றுதொழ வென்றே
புந்திமகி ழோலைபல போக்கியபின் வெய்யோன்
முந்துற வொளித்தனன் முளைத்தன னிராவோன். (௪௪௪)

## வேறு.

தூங்கவா னென்னு மாதின் சுடர்நுதற் றிலக மென்னக்
கங்குலா மடந்தை பார்க்குங் கவின்கொள்கண் ணாடி யென்னச்
சங்கவார் குழையார்க் கிட்ட தரளவெண் கவிகை யென்னத்
திங்கண்மாக் கடவு டோன்றச் சிறந்தது ஞால மெல்லாம். (௪௪௫)

இன்றொரு தினமுந் தோரா விங்கிரு நாளை யாங்கள்
உன்றன துயர்ச்சி யின்மை காட்டுவ முலகிற் கென்று
நன்றிகொண் மனையிற் சென்றே யாருநல் லுணவு மாந்தி
அன்றிருண் மேன்மை யாள ரருந்துயில் பயிலுங் காலை. (௪௪௬)

அழகுற மன்றி லாடு மையர்கைப் பிரம்பு தாங்கித்
தழைசடை முடியு மேனி சாத்திய நீறு மாகி
விழைதரு வடிவங் கொண்டு வெளிப்படக் கனவில்வெய்யோன்
எழுவதன் முன்ன ரெய்தி யாவர்க்கு மிதுபு கன்றார். (௪௪௭)

வருந்துவ தொழிமி னம்மூ ரெல்லையின் வைகி யன்பால்
இருந்தனன் வாத வூர னிவ்வுரை கேட்ட போதே
பொருந்திய தர்க்க நூலாற் புத்தரை வெல்வா னின்னே
அருந்தவ முடைய நீர்போ யழைத்திடு மவனை யென்றார். (௪௪௮)

கண்டனர் கனவு தன்னில் விழித்தனர் கனக மன்றில்
ஒண்டொடி பாக னன்பா லுரைத்தது கருத்தி லாய்ந்து
கொண்டனர் மகிழ்ச்சி செங்கை குவித்தனர் முடியிற் கோயில்
மண்டப மிசையே யெல்லா மாந்தரும் வந்து தொக்கார். (சசக)

புல்லறி வுடைய புத்தன் புகன்றதற் கிரங்கிப் பின்னர்
எல்லையில் கருணை யான்வந் திருங்கன வதனி லெய்திச்
சொல்லிய மொழியி னாலே சோதிகொண் முகத்த ராகி
வல்லிருட் குவிந்து வெய்யோன் வரவிரி கமல மொத்தார். (சருய)

தெய்விக மான மன்றிற் றிருநடம் புரியு நாதன்
தைவரு நீருஞ் செய்ய சடையுநற் பிரம்புந் தாங்கி
மைவிரி கங்குற் காலை வந்துநன் மகிழ்ச்சி யெய்த
இவ்வகை மொழிந்தா னென்றென் றேவருங் கனவு சொன்னார். ()

அத்தனை மன்று ளாடு மையனை வியந்து கூறித்
தத்தமி லன்பு கூர்ந்து தரித்துள வருத்த நீங்கி
மெய்த்தவர் வாத வூரர் மேவிடத் தணுகு வோமென்
றுத்தம பன்ன சாலை யொல்லையிற் குறுகி னார்கள். (சருஉ)

கூடினர் பன்ன சாலை கூரருட் குன்றை யன்பால்
நாடின ருவந்து கண்டார் நளினவா சனத்தின் மீது
பீடின ரிருந்த யோகம் பெயர்ந்தனர் வியந்து மன்றில்
ஆடின ருரைத்த வெல்லா மாங்கவர்க் கியம்பி னார்கள். (சருங)

## வே று.

அந்தமொழி யன்பினர் செவிப்புல னிலங்குறலு மன்றிறை பணித்த துணரா, வந்தவரு டன்கடிது சென்றுதிரு மன்றனை வணங்கியருள் பெற்று மயலாஞ், சிந்தைய ரிருந்தமணி மண்டபம தெய்தியவர் தீயமுக நாடி விடரே, நந்துமென வேயெழினி கொண்டுமறை வித்தெதி ரிருந்தனர் நலங்கொ ளணைமேல். (சருச)

மன்னுமறை யந்தணர் புராணிக ரருங்கலைகள் வல்லவர்நல் லோர்க ளுடனே, சென்னிவள வன்கடிது வந்துதிரு மன்றனெதிர் சென்றுதொழு தங்க ணகலா, மின்னுமணி மண்டபம தெய்தியரு ளன்பரை வியந்தடி வணங்கி யருகா, நன்னரணையின்புற மிருந்த னன் விரிந்தகலை நாணிறைவு கொண்ட மதிபோல். (சருரு)

ஈழவள நாடனு மெழுந்தடி பணிந்துதிறை யிட்டகுறை நல்கி யிறைவா, வாழிமிக வாழியென நின்றபொழு தங்கவனை மன்னர் பெரு மானு மகிழா, வேழமிவை நன்றுவிலை யில்லையிம் மணிக் கென வியந்தரு கிருத்தி யெவருஞ், சூழுமவை தங்குதலு மங்கய லிருந்தனர்கள் சூழ்ந்துகரி சொல்லு மயலோர். (சருசா)

தில்லைநக ரந்தணர் தபோதனர் சிறந்திளி திருந்துழி விரிந்த சிவநூல், வல்லவ ரிழிந்தகுண புத்தனுடன் வாதுசெயு மன்னுசபை காண வருவோர், தொல்லைமறை தந்தவன் முகுந்தன் முனிவோ ரெழுவர் சூழுமிரு நான்கு திசைமேல், எல்லையிலிருப்பவ ருருத் திரர்கள் விஞ்சைய ரிராப்பக லிலங்கு கதிரோர். (சருஎ)

## வே று.

தன்பெருந் தானை சூழ விருந்ததண் பொன்னி நாடன்
தென்பெருந் துறைசூழ் நாடன் றிருவடி வணங்கி நின்று
நின்பரஞ் சைவ ஞான நிலையினி னிறுத்தல் பின்னர்
என்பரம் புத்தர் தம்மை யீங்குயிர் செகுப்ப தென்றான். (சருஅ)

வளவனிவ் வகையிற் கூற வந்தபொய்ப் புத்த ரெல்லாம்
உளமயர் வெய்த வாத வூரரு மகிழ்ச்சி யெய்திக்
களவுரை பகர்வோய் வந்த காரண முரைநீ யென்னக்
கிளர்செவி நுழைவே லென்னக் கேட்டவ னிதனைச் சொல்வான். ().

மன்னுமெங் கடவு ளல்லான் மற்றிலை கடவு ளென்றே
இந்நெடும் பதியி லெய்தி யியம்பியிங் கெவருங் காணப்
பொன்னினம் பலத்தே யெங்கள் புத்தரை வைத்தல் வேண்டி
யென்னவர் திருந்தே னீங்கு வேறிலை நினைந்த தென்றான். (சசுய)

என்றலும் வாத வூரெம் மிறைவர்புன் புறுவ லெய்தி
முன்றவ மொன்று மில்லாய் முயலிப மாவ துண்டோ
நன்றது நிற்க வுன்ற னற்பெருங் கடவு டானுஞ்
சென்றவ னடியிற் சேருஞ் செய்தியுஞ் செப்பு கென்றார். (சுசுக)

அண்ணலா ருரைத்த போதி லாங்கவன் வெகுட்சி யெய்திக்
கண்ணிலா தவற்கு வெய்யோன் கதிரொளி காட்ட லாமோ
நண்ணலா வெங்க ளாத னற்புக முரைக்கி னன்று
எண்ணிலா யிரங்கள் வேண்டு மென்றுபி னிதுபு கன்றான். (சுசுஉ)

அறந்திகழ் பிடக நன்னூ லோதியன் புடைய னாகிப்
பிறங்குபல் யோனி தோறும் பிறந்துயிர்க் குறுதி செய்து
மறந்தரு கோற லாதி நால்வகை யொழிந்து மாண்பு
சிறந்துள போதி நீழற் சேர்வனெம் மிறைவ னாவான். (சுசுங)

மேவிய கருவிற் சேரு முருவம்வே தனைகு றிப்புப்
பாவனை யுடன்விஞ் ஞானம் பஞ்சகந் தங்கள் கூடி
ஓவில்பல் லுணர்வுண் டாகி யொழிவது பிறவித் துன்பம்
ஆவது பொன்றக் கேடா யழிவது முத்தி யென்றான். (சுசுச)

வாதவூ ரண்ண லாரும் வண்புனற் பொன்னி நாடன்
தீதிலா முகத்தி னூடு சிறந்தருட் பார்வை நல்கிப்
பேதையா யறிமால் கொண்டு பித்துரை பகரும் புத்தற்
கேதியா மின்று சொல்வ தென்றுபின் னிதுபு கன்றார். (சுசுரு)

தருமமுண் டென்று நன்னூல் சாற்றினன் றலைவ னென்னை
மருவிய வுணர்வுண் டாகி மறைந்திடுங் கணத்தி னென்னை
பொருளுட னுரைதான் றேடிப் புகலுமுன் னுணர்வு போனால்
இருடரு நின்னூல் சொல்வ தெப்படி யியம்ப வேண்டும். (சுசுசு)

ஆதலா லறநூ லென்ப தனக்கிலை யுயிர்கட் காகப்
பேதமாம் யோனி தோறும் பிறந்தன னிறைவ னென்றாய்
தீதுசே ரொருவர் மாலைத் தீர்க்கவந் தவர்க டாமும்
போதமால் கொள்ளி னம்மால் போவதங் குள்ள தாமோ. (சுசுஎ)

கொல்வது கருதா னெங்கள் கோவென வுரைத்தாய் முன்னம்
பல்வகை யோனி தோறும் பார்மிசைப் பிறக்கு நாளில்
வெல்புலி நரியே யாகி வெம்பசி யுற்றான் மற்றுப்
புல்லொடு தழையோ தின்பா னின்பெரும் போதி நாதன். (சகூஅ)

காரவெனு முன்ற னூலிற் கந்தமைந் துடனே கூட
உருவமு மழிபு மென்று யுன்னிறைக் குருவ மெங்கே
விரவிய யோனி தோறு முயிர்க்கருள் செய்ய வேண்டி
மருவொரு வடிவங் கொண்டா னென்பதே மதியி லாதாய். (சகூகூ)

காரண வுயிரிற் கூடுங் காரிய வுருவின் றேலுன்
சீரணி போதி நீழற் சேரிறைக் குருவ மில்லை
பூரண ஞான மில்லாய் பொன்றுகை முத்தி யென்னும்
பேருணர் வில்லா வுன்றன் பிடகநூல் யாவர் சொன்னார். (சஎ0)

இருபதிற் றொருவ ராக வெண்ணுமுன் புத்த ரெல்லாம்
வருவது சிறந்த தாயர் வயிற்றினைப் பீறி யென்பை
பரிவொடு சுமந்து பெற்று றுயிர்கெடப் பழுது செய்தே
அருநர கத்தில் வீழு மவர்களோ கடவு ளாவார். (சஎக)

காவுடைப் பூத நான்கின் கலப்பினிற் பேத மல்லா
துருவினுக் குயிர்வே றின்றென் றுரைப்பைநின் பொய்ம்மை நூலில்
இரவினிற் றுயிலுங் காலுன் முகத்தினி லேறிப் போகும்
அரவினைப் பூத பேத மறிந்ததோ வறிவி லாதாய். (சஎஉ)

உருவமு முயிருங் கூடு முணர்வுனக் கில்லை யிந்த
உருவமிங் கழிந்த காலை யுயிர்கடி தகன்று போகும்
உருவமு முயிருங் கூடிப் பிறக்குமே லிதனு லுன்றன்
உருவமு முயிரும் வேறு மென்றுரை யுன்றன் வாயால். (சஎங)

வானமு மில்லை வானத் தோசையு மில்லை வானம்
ஆனதில் வழக்க தாமென் றரற்றுவை யுன்ற னூலில்
காணிலம் புனற் நான்குங் கலப்பதற் கிடம தாகும்
நீநவி லோசை வானி னிகழ்ந்துள செய்தி யென்பாய். (சஎச)

இடமிருந் திசைதா னென்ப தில்வழக் கென்னு நீயே
வடநெடுந் திசையிற் போதி மரமென வணக்கஞ் செய்வை
புடவியி லறிவி லாரும் பித்தரும் பொய்ம்மை யோரும்
உடனிக ழவையிற் கூறி னெக்குநீ யுரைத்த வெல்லாம். (சஎ௫)

மாமுயி ரல்ல வென்பை மன்னுமைம் பூத மான
உருவினர் போல நன்னீ ருணவினாற் கிளைகொண் டோங்குஞ்
சருகெழு முணவின் ருயி ருதலாற் சன்ன பேதத்
தருவினை யருத்த வெங்கோ னுருயிர்க் கமைத்த தென்பாய். ()

வன்பெரும் பழுது கோறன் மண்மிசைப் பிறர்செ குத்த
புன்புலா றின்ன னன்றென் றுரைப்பைநின் பொய்ம்மை நூலில்
தின்பையென் றுனக்கு நல்லூ னுடலுயிர் செகுத்தே யூட்டி
உன்பசி தணிப்பார் பாவ மெய்துவ துனக்கு நன்றே. (சஎஎ)

காரண மிறக்க வென்றுங் காரியங் கெடுதல் வீடென்
றாரணம் பரவு மெங்கோ னுகமம் புகல்வார் சொல்வார்
போரணங் குயிருஞ் சேரப் பொன்றுதன் முத்தி யென்று
பேரணங் குற்ற நீயே பிறிவறி யாது சொன்னய். (சஎஅ)

அழிந்திடி னைந்து கந்த முத்தியென் றுரைத்தா யைந்தும்
அழிந்திடின் முத்தி பெற்று ரரெவன வினவுங் காலை
அழிந்திடு மைந்தி னுண்டா முணர்வென வுரைக்கி னைந்தும
அழிந்தது மிலதா முத்தி யாவது மில்லை யென்றுர். (சஎ௯)

## வேறு.

பொங்குபுகழ் மங்கியுள புத்தனும் வெகுண்டே
எங்கடவு ளில்லைபெறு முத்தியிலை யென்றீர்
உங்கடவுள் யாதுமது முத்தியெது வென்னத்
தங்குசிவ ஞானமுணர் சைவரிது சொல்வார். (சஅ௰)

ஆலமணி நீழலி லிருந்தற முரைக்குங்
கோலமது கண்டுபலர் கும்பிட நடிப்போன
மேலணிய நீறனுமை கூறனருண் மேவுஞ்
சீலனவ னற்பெருமை செப்பவெளி தாமோ. (சஅக)

தில்லைமணி மன்றிலுறை திங்களணி யெங்கோன்
எல்லையுள ஞேமொழிய வென்றருள் புரிந்தே
சொல்லுமள விற்பல தொடுத்துநவி லாதே
நில்லுமிது கூறுமென நீசனி துரைத்தான். (சஅஉ)

முன்னர்வட நீழலி லிருந்தற மொழிந்தான்
என்னிறைவ னென்னுமுறை யென்னெறி ருரைத்தீர்
மன்னுசெப மாலைகொ டிருகருமது மற்றோர்
உன்னரிய நற்கடவு ளுண்டென நினைந்தோ. (சஅங)

மல்லலுல கத்தவர் வணங்கிட நடிப்பன்
தில்லையிறை யென்னவுரை செப்பினிர் செகத்தே
நல்லறிவி னோர்கள்சிலர் நாடுமவ ருண்டாப
அல்லதுத மிச்னசதனி லாடுபவ ருண்டோ. (சஅச)

வையமுழு துய்யமணி மன்றினு ணடிப்போன்
மெய்யணியு நீறனென மேன்மைகொ டுரைத்தீர்
செய்யவொளி தங்குதிரு மேனிதனி னீறே
துய்யதென வோவுமது தொல்லிறை புனைந்தான். (சஅரு)

மங்கையொரு பங்கனென வண்மைகொ டுரைத்தீர்
பங்குபடு பெண்வடிவு பாரின்மிசை யுண்டோ
அங்கமொரு பாதிமட மாதினுரு வானல்
உங்களிறை நீர்துறவி லுற்றதவ மன்றே. (சஅசு)

என்றவன மொழிந்தபி னிகழ்ச்சிநகை செய்தே
மன்றனடி யார்கள்பெரு வாழ்வுபெற வந்தார்
நன்றியுப தேசமிது நற்றவ மிலாதாய்
உன்றனெதிர் சொல்வதல வென்றிதுரை செயவார். (சஅஎ)

ஓங்குசெப மாலைகொ டிருத்த னுலகெல்லாம்
ஈங்குயர் தவங்கள்செய வென்றினிது கொள்ளாய்
தாங்கிய படைத்தொழில்கள் சார்பொடு பழக்கும்
பாங்குள பணிக்கர்கர பத்திரம தாகும். (சஅஅ)

ஈட்டிய தவப்பய னிலாதவர்கள் போலூன்
நாட்டமுடை யாரெதிர் நடித்திடுவ னென்றாய்
காட்டவனல் போலுடல் கலந்துயிரை யெல்லாம்
ஆட்டுமொரு நட்டுவனெம் மண்ணலென வெண்ணாய்.(சஅக)

நீற்றினை யணிந்ததுவெ னின்னிறைவ னென்றே
சாற்றினை யுயிர்க்கிடர் தணிக்கவென வெண்ணாய்
தோற்றியுள தம்புதல்வர் துன்பமுறும் வெந்நோய்
மாற்றும்வகை யன்னைய ரருந்திய மருந்தாம். (சகும)

புல்லறிவு கொண்டுபல பொத்துமொழி புத்தா
நில்லவன லாலொருவர் நீறணிவ துண்டோ
நல்லதிரு நீற்றினுள நன்குமறை தானே
சொல்லுமத லாலொருவர் சொல்லவெளி தாமோ. (சகூக)

பாகமதி லுத்தமியை வைத்தல்பழு தென்றாய்
போகமுல குக்கருள் புரிந்தருள வென்றே
மாகமுகி லொத்தகுழன் மங்கையொ டிருந்தான்
யோகமுயிர் கட்குதவ யோகவுரு வானான். (சகூஉ)

வந்தர்கர முற்றதுடி யன்றியறி யார்போல்
இந்தமொழி கற்றனை யினிப்பிறிது தேராய்
மைந்துபுனை சந்தவிடை யான்மலரின் மன்னும்
கந்தமென நின்றநிலை கண்டிலைக ளில்லாய். (சகூங)

ஆதிபர மாதிசிவ யோகியரு வாரூஞ்
சோதிவெகு ரூபிசுக வாரிதுய ரில்லா
நீதிமணி மன்றதனி னிற்குநிலை யல்லால்
யாதுமுடி யாதுபதம் யாரறிவ ரென்றார். (சகூச)

மைந்தர்மட வார்தமது வாக்கிறைவி நீபே
இந்தவகை பொய்ம்மொழி யியம்புவதெ னென்றே
அந்தமில வாகிய வருங்கலைகள் வல்லார்
முந்துகலை மாதினை முனிந்திது மொழிந்தார். (சகூரு)

## வே று.

தொக்க நான்மறை சொல்லுநீயிவை சொல்வ தென்கலை மாதராய்
தக்கன் வேள்வியி லுன்றஞாசி தடிந்த தின்று மறப்பதே
முக்க ணொரு ளில்லையென்றிடு மூகர் நாவை யகன்றுநீ
நக்க ஞர்திரு வாணை யேகென நாம டந்தையு மஞ்சினள். (சகூசு)

அஞ்சி வஞ்சகர் நாவினின்று மகன்ற பின்பவர் தாமெலாம்
நஞ்ச யின்றவர் போலொடுங்கி நடுங்கி மூகைக ளாயினர்
நெஞ்ச நொந்துபி னீழநாட னினைந்தி டுஞ்சிவ ஞான நூல்
எஞ்ச லின்றிய செல்வர்பாத மிறைஞ்சி நின்றிது கூறுவான். (சகூஎ)

சொல்ல வல்லவர் மூகையாயினர் சொல்லி லாவொரு மூகையாம்
வல்லி யென்புதல் விக்குமூகை மறைந்து நல்லுரை கூறினல்
நல்ல தொண்ட னுமக்குநானென நாய ஞரவ டன்னைநீ
ஒல்லை யிங்கழை யென்னவந்தவ ளுண்மை சேரவை நண்ணினள்.

நண்ணி யங்குமு னின்றகன்னியை நன்மை யாளரு நாடியே
கண்ணி னின்னருள் செய்துபின்னர் கரைத்து முன்ன ரிருத்தியே
உண்ண டுங்கி யிருந்தபுத்த னுரைத்த தர்க்க மவைக்கெலாந்
தண்ண றுங்குழல் வல்லிநல்லுரை சாற்று கென்று விளம்பினர். ()

பற்று நன்குண ராதபுத்தர் பகர்ந்த தர்க்க மவைக்கெலாம்
கற்று ணர்ந்தவர் போலமன்னிய கன்னி மாறுரை கூறினள்
மற்று மங்கையர் சாழலாம்விளை யாட லாக மகிழ்ச்சியால்
ஊற்ற தன்பொரு டன்னைவாசக மாக வுண்மைப ரோதினர். (௲௱)

ஈழ மன்னனு மஞ்செழுத்து மியம்பி நீறு புனைந்துபின்
தாழ நின்றடி மைத்திறந்த வறாத தொண்டின னாயினன்
சோழ னும்புலி யூரின்மன்னிய தொன்மை யாளரு மம்பலம்
வாழ்க வென்று துதித்துநின்றெழில் வாத வூரரை யேத்தினார். ()

தக்க சீர்பயி லீழமன்னுயர் சைவ னாரெதிர் நின்றுநன்
கக்க மாலை புனைந்துநீறு மணிந்து தொண்டின னானபின்
துக்க மாகிய சீவரத்துவ ராடை மூடு முடம்பினார்
மிக்க காதர மூகைதீர்த்திட வேண்டு மென்று வணங்கினான். (௫௱௨)

இன்ன வாறருள் செய்குவாயினி யெம்பி ரானென வன்புடன்
பொன்னி சூழ்வள நாடனும்புலி யூரு ளாரு மிறைஞ்சினார்
மன்னு சீர்புனை வாதவூரர் மகிழ்ந்து பார்வையை நல்கவே
முன்ன ராக வணங்கியேயவர் மூகை தீர்ந்திது கூறினார். (௫௱௩)

மாசி லாத மனத்தினாய்முன மன்னு தீவினை செய்தலால்
ஆசி லாதவெ ணீறணிந்துந லஞ்செ ழுத்துரை செய்திலேம்
பூச லாகிய நீறுடன்புனை யக்க மாலைகள் காவியாம்
தூசு தாதுவ ராடையைச்சுடு வென்று துன்றி வணங்கினார். (௫௱௪)

கோட்ட மின்றிய வுண்மையார்நகை கொண்டு நின்ற முகத்தராய்
ஈட்டு முன்செய் தவத்தினாரிவ ரென்று சிந்தையி லெண்ணியே
வாட்ட ருந்திரு நீறணிந்து வயங்கு ருத்திர சாதனம்
பூட்டி யங்கவர் சீவரங்கிளர் பொங்கு தீக்கிரை யாக்கினார். (௫௱௫)

பொய்யி லாவரு ளையரும்புலி யூரு ளார்களு முன்புசேர்
மைய லாகிய வேடமின்றி வயங்கு நீறணி வார்களும்
துய்ய காவிரி நாடனுந்துக ளறு மீழர்த மன்னனும்
செய்ய மாமணி மன்றுளார்திரு முன்பு சென்று வணங்கினார். ()

பொன்று கின்றது முத்தியென்று புகன்று நின்றுழல் புத்தர்தாம்
மன்ற கண்டு வணங்கியன்புடன் மாபெ ருந்தவ ராவதே
இன்றி தன்பொரு ளாவதென்பல வாறு டன்கடன் மீதிலே
சென்ற தண்புன லல்லரோவுயர் தில்லை யெல்லையி னண்ணினார். ()

மன்ற கன்றபின் யாவருஞ்செல வாத வூருறை வள்ளலார்
சென்றி லங்கு திருப்புலீசர் சிறந்த பாதம் வணங்கியே
நன்றி துன்றிய வங்கண்வைகினர் நல்ல தில்லையு ளாரெலாம்
என்று மிங்கிரு மையர்நீரினி யென்று தம்மனே யேகினர். (௫௱அ)

பொன்னி நாடனு மீழநாடு புரந்த மன்னனு முன்புசேர்
மன்னு தீவினை தீரமன்று வணங்கி நீறணி வார்களும்
முன்ன ராக விறைஞ்சினான முதிர்ந்த கோவை யகன்றுபோய்
மின்னு மாமணி மாடமாளிகை தம்மி லன்புடன் மேவினர். (௫௱க)

புன்மை வேட மகன்றுநீறு புனைந்து ளார்களு மன்னனும்
தொன்மை யார்திரு வாதவூரர் துலங்கு பாதம் வணங்கியே
நன்மை யார்மணி மன்றிறைஞ்சி நயந்து நெஞ்சினில் வஞ்சமாம்
வன்மை யான தொழிந்துதில்லைத மன்னு மூரென வைகினர். ()

புத்தரைவாதில்வென்றசருக்கம் முற்றிற்று.

இச்சருக்கத் திருவிருத்தம் - கக

## திருவடிபெற்றசருக்கம்.

உடம்படப் பொய்யை மெய்யா வுரைத்திடுஞ் சமய மென்னும்
தடங்கயத் திரளை வெல்லுந் தனிப்பெரு மடங்க லன்னர்
நெடுந்தவப் பெருமை யாலே நினைப்பருஞ் சைவ ஞானம்
இடம்படப் புகல்வார் பின்ன ரெய்திய செய்தி சொல்வாம். (௫கக)

ஆடல்வெம் படையி னுட்சி யெழுச்சியோ டச்சோ வென்னும்
பாடலுந் தெய்வ லோக யாத்திரைப் பத்து மோதித்
தேடலுந் திகைப்பு மீளத் தெளிதலுஞ் சிறுமை கொண்டு
வாடலுங் களிப்பு மில்லா மன்பெரு வாழ்வி லானர். (௫கஉ)

போற்றுமஞ் செழுத்து நீறும் புவிமிசை விளங்கத் துன்பம்
மாற்றிடுஞ் சைவ ஞான வாசகம் புகல வந்தார்
சீற்றமில் புலியும் பாம்புஞ் சீர்பெற வணங்கு மன்றில்
ஏற்றினன் புலியூர் மேலைச் சிவபத மென்று கண்டார். (ருகரு)

ஐயரங் குறையு நாளி லாடக மன்றி லாடும்
மெய்யர்தங் கருணை யாலோர் வேதியர் வடிவங் கொண்டு
துய்யமுப் புரிநூன் மார்புந் துலங்குபுத் தகமுந் தோன்றச்
செய்யமென் பாத நோவச் சென்றுமுன் னாக நின்றார். (ருகச)

முன்புற நின்ற வேத முதல்வரை முகத்தி னோக்கி
இன்புற வாத வூர ரிருமென விருந்த பின்னர்க்
கொன்புனை மறையின் மிக்கீ ரெங்குளீர் கூறு மென்ன
மன்பெரு வளஞ்சேர் பாண்டி மண்டலத் திருப்பே னென்றார். ()

பாண்டிநா டென்ற பின்னர்ப் பரிவுடன் செறிவு கூறி
ஈண்டுநீர் வருதல் வேண்டுங் காரண மியம்பு மென்ன
ஆண்டநா யகன்ற னாணை யாகிய கருமம் நும்மைக்
காண்டலே யென்று பின்னுங் கருத்துற விதனைச் சொன்னார். ()

மண்ணிடைப் புகுந்து மேலை வானிடைப் பறந்து முன்னர்க்
கண்ணனு மயனுந் தேடிக் காண்பதற் கரியார் தம்மைப்
புண்ணிய மன்றி லாடும் புனிதரைப் பரியி லேறப்
பண்ணுநும் பெருமை யாலே வாழ்ந்தது பாண்டி நாடு. (ருகஎ)

தென்பெருந் துறையி லையன் றிருவடிச் சேவை செய்து
துன்பமொன் றின்றி வாவி சூழ்கழுக் குன்றிற் சென்று
பொன்பொலி மன்றி லெய்திப் புத்தரை வாதில் வென்றீர்
என்பது கேட்டுப் பின்னர் யாவரு மகிழ்ச்சி கொண்டார். (ருகஅ)

ஆதியை மன்று ளாடு மையனை யன்பி னாலே
ஓதிய தமிழின் பாட லுள்ளவை யோத வெண்ணி
மாதுய ரகல வின்னே வந்தன னெழுதல் வேண்டும்
வேதியர் பெருமா னின்று விளம்பிடும் விளங்க வென்றார். (ருகக)

விண்ணகம் பரவு நாத னிவ்வகை விளம்பச் சிந்தை
நண்ணுமன் புடைய ராகி நற்சடை முடியார் தம்மை
எண்ணருந் தமிழின் பாட லியம்பிய வையரப்போ
துண்ணெகிழ்ந் துளமெய்ஞ் ஞான வாசக முவந்து சொன்னார். ()

அங்கவ ருரைத்த தெல்லா மம்பலத் தாடு மையர்
செங்கையி லேடு வாங்கித் தெளிவுற வரைந்த பின்னர்ப்
பொங்கிய வருளி னாரும் புகன்றிட ரகலத் தையல்
பங்கினர் தம்மைக் கோவை பாடுதல் வேண்டு மென்றார். (ருஉக)

மன்னிய தவத்தின் மிக்கா ரதற்குள மகிழ்ந்து கூற
முன்னுற விருந்து கோவை யெழுதினர் முடிந்த பின்னர்ப்
பொன்னவிர் வேணி யார்தாம் புத்தகஞ் சேமித் தங்கண்
மின்னென மறைந்தார் சொன்ன வித்தக ரயர்ச்சி கொண்டார். ()

எழுந்தன ரெங்கு மோடி நாடின ரிதென்கொ லென்னு
அழிந்தனர் மன்று ளாடு மாதியென் றறிந்த பின்னர்ப்
பொழிந்தனர் கண்ணீ ரெங்கே போயினை யென்று மண்மேல்
விழுந்தனர் பரமானந்த வேலைவெள் ளத்து ளானார். (ருஉ௩)

செந்தமிழ்க் கன்பு மிக்கார் சென்றுதம் மன்றி லெய்தி
அந்தரத் தவரை மாலை யயனைநன் முகத்து நாடி
நந்தமக் கடிமை பூண்டு நயந்தவ னொருவன் சொன்ன
இந்தநற் பாடல் கேண்மி னென்றவர்க் கருளிச் செய்தார். (ருஉச)

மெய்த்தவ வாத வூரன் விளம்பிட வெழுது மிந்தப்
புத்தக மன்று ளாடல் புரிந்தவ னெழுத்தா மென்று
முத்தியை யுதவுங் கோவை முடிவிடத் தெழுதிப் பின்னர்ச்
சித்திர மலர்க்கை யாலே திருந்தமைக் காப்புஞ் செய்தார். (ருஉரு)

வெண்பிறை முடித்த வேணி வித்தக ருலகுக் கெல்லாம்
நண்புடை வாத வூரர் நற்றவ முணர்த்த வெண்ணி
எண்பெறு முனிவர் விண்ணோ ரிறைஞ்சுமம் பலத்து வாயில்
வண்படி மீதே யுண்மை வாசக முற்றயை வைத்தார். (ருஉசு)

வைத்தபின் பூசை செய்யு மந்தணன் வந்து கண்டிப்
புத்தக மிங்கு நண்ணும் புதுமை தைவிகமா மென்று
சித்தமங் குருகி நின்று தில்லையுள் ளார்கட் கெல்லாம்
இத்திறங் கூறல் வேண்டு மென்றுமன் றகன்று போந்து. (ருஉஎ)

செந்திரு மருவுந் தொல்லைத் தில்லைநன் னகரி லுள்ளார்
தந்திரு முன்பு சென்று சாற்றினு னிந்த நீர்மை
அந்தணன் மொழிந்த பின்ன ரதிசய மிதுவென் றோடி
வந்தவர் படிமே லண்ணல் வைத்தபுத் தகங்கண் டார்கள். (ருஉஅ)

யாவருந் தம்மு ணுடி யெம்மிறை யுறைய மன்றுள்
தேவரும் புகுத லொண்ணு தெய்விக மிதுவென் றெண்ணி
மேவுமன் பதனு லண்ணல் விளம்பிய சைவ நூலோ
தாவுசெந் தமிழோ வென்று பார்ப்பது தக்க தென்றார். (ருஉகூ)

தேக்கிய வருளு மன்புஞ் சிறந்தவ ரெல்லாஞ் சொல்லும்
வாக்கினி லொருவன் சென்று மலர்கொடு வணக்கஞ் செய்து
பூக்கமழ் சடையோன் வைத்த புத்தகந் தன்னைச் சேமம்
நீக்கின னேதி னுன்முன் னீதிகொ ளாகவ னுன்கும். (ருகூ0)

## வேறு.

திருச்சதக முதலாகச் சிறந்ததமி ழுறு நூறும்
விரித்தவகப் பொருட்கோவை விளங்கவொரு நானூறும்
உரைத்தனன்பின் முடிந்தவிடத் துயர்வாத வூரன்மொழி
தரித்தெழுது மம்பலவ னெழுத்தென்று சாற்றினுன். (ருகூக)

கேட்டவர்க ளெல்லோருங் கிளர்புளகங் குறுவேர்வு
காட்டிடவொண் கண்ணீருங் கசிந்துருகு சிந்தையுமாய்
ஈட்டியமெய்த் தவமுடையோ னியம்பியவித் தமிழன்றி
வீட்டுநெறிக் கினிச்சிவநூல் வேறுளதோ வென்றார்கள். (ருகூஉ)

பூணரவன் றிருநாமம் புகழுமருந் தவர்சொல்ல
யாணரிதன் பொருடன்னை யின்றுணர்வோ மென்றெண்ணி
மாணுடைமன் றகன்றேகி மறைவல்லார் போதிநிழல்
வீணருடன் பெருவாது வென்றவர்முன் சென்றார்கள். (௫௰௩)

சென்றவர்தந் திருமுன்பு திருமுறைவைத் தண்டர்பிரான்
இன்றுசெயுஞ் செயலிதுவென் றியம்பினர்பின் றெல்லோரும்
ஒன்றியவென் புன்பாட லுவந்தருளப் புவிமீதில்
அன்றுசெயுந் தவமறியே னென்றழுதா ரன்பாளர். (௫௰௪)

புண்ணியரிங் கிவ்வாறு புலம்பியபின் புலியூரில்
எண்ணருமன் புடையார்க ளிதமுடனஞ் சலிசெய்து
பண்ணுலவுஞ் சிவஞானப் பாடல்கொளும் படிநும்பால்
நண்ணுமரன் செய்ததென்னீர் நவிலுமெனச் சொன்னார்கள். (௫௰௫)

அல்லலெனும் பிறவியிலா ரண்ணல்செயுஞ் செயல்யாவும்
சொல்லினர்பின் புலியூரர் தொழுதுமனங் களிகூர்ந்து
தில்லையிலெம் பெருமானைச் செப்பியவித் தமிழ்மாலை
நல்லவரும் பொருள்கூற வேண்டுமென நவின்றார்கள். (௫௰௬)

ஓங்குபுகழ்த் திருவாத வூருறையெம் பெருமானும்
தேங்கியமெய்ச் சிவஞானச் சிந்தையுடன் களிகூர்ந்து
பூங்கனகப் பொதுவெதிரே போய்ப்புகல்வே னெனப்போக
ஆங்கவர்முன் சென்றாரு மன்பொடுபின் சென்றார்கள். (௫௰௭)

நின்றபுகழ்ப் புலியூரர் நேயமுடன் புடைசூழச்
சென்றருளுக் கிடமான செம்பொனினம் பலமெய்தி
ஒன்றியவித் தமிழ்மாலைப் பொருளிவரென் றுரைசெய்து
மன்றதனிற் கடிதேகி மறைந்தனரங் கவர்காண. (௫௰௮)

செய்காட்டுங் கமுகடவித் தில்லையுளார் பொருளென்று
கைகாட்டித் தம்முருவங் காட்டாமன் மறைந்தாரைப்
பைகாட்டும் பேரரவப் பணியுடையார் தமக்கன்பு
மெய்காட்டிப் பாலுடனே மேவியங்கீ ராக்கினார். (௫௰௯)

### வேறு.

ஈனமிகுந் துளதோலு மென்புநரம் புஞ்சீயும்
ஆனவுடல் சிவரூப மாமிதனைத் தெளியாமல்
ஊனுடலுக் கிரைதேடி யுழன்றுலகிற் றடுமாறி
மாநரகிற் புகுவாரே மாயைவலைப் படுவார்கள். (௫௪௰)

### வேறு.

அண்டனை யண்டர் கோனை யன்பின ரடையு மாறு
கண்டனர் புளக மெய்திக் கம்பித மாகி நின்று
விண்டனர் கசிந்து கண்ணீர் வேர்த்தனர் மேனி யெங்கும்
கொண்டனர் மகிழ்ச்சி செங்கை குவித்தனர் தில்லை யுள்ளார். ()

### வேறு.

பூத நடங்க டொடங்கின போத மகிழ்ந்தணு குங்கண
நாதர் புகழ்ந்தனர் தும்புரு நாரத ரங்கிசை கொண்டனர்
வேதமொ டந்தர துந்துபி மீது முழங்கி யெழுந்தது
மாதவ ரிந்திர ரைந்தரு மாமலர் சிந்தி வணங்கினர். (௫௪௨)

ஞான நடம்பயில் சங்கர னும மிருந்துள நெஞ்சினர்
மோன சுகந்த முடன்சிவ பூசை முயன்று நயந்தவர்
ஊனமி லன்பொடு தென்புலி யூரி லுறைந்து சிறந்தவர்
வானக மும்பர வந்திரு வாசக வின்ப நுகர்ந்தனர். (௫௪௩)

வாதவூ ரந்தணர் தந்திரு வாய்மை விளங்கு திருக்கதை
ஓதின ரன்புட னொண்செவி யூடு முகந்தது கேட்டவர்
போதமெய்ஞ் ஞான முறுஞ்சுக போக முடன்புகழ் பெறுவர்கள்
தீதில் பவங்க டொலைந்துபின் சேர்குவர் வண்சிவ லோகமே. ()

வே று.

பூதல மாதும் வாழ்க பொன்மழை பொழிந்து வாழ்க
வேதவா கமமும் வாழ்க வேந்தர்செங் கோலும் வாழ்க
தீதிலஞ் செழுத்து நீறுஞ் சிவனடி யாரும் வாழ்க
வாதவூ ரிறை புராணம் படித்தவர் கேட்டோர் வாழ்க. (௫௪௫)

திருவடி பெற்றசருக்கம் முற்றிற்று.

இச்சருக்கத் திருவிருத்தம் - ௬௫.

---

# திருவாதவூரடிகள் புராணம்

## முற்றுப்பெற்றது.

---

# அருஞ்சொற் பொருளகராதி.

---

## அ.

அகல-நீங்க, ௧௩
அகழ்ந்து-தோண்டி, ௩௮௨
அக்கு-உருத்திராக்கமாலை, எலும்புமாலை, ௨.௰, ௪௫
அங்கி-மழு, ௪௩௨
அங்குரித்து-முளைத்து, ௧௫
அடவி-காடு, ௩௭௮
அடி-வேர், ௫௨; கீழ், ௬௪
அடு-வென்று, ௱௮௩
அடுதல்-கொல்லுதல், ௱௩௮
அடையலார்-பகைவர், ௱௮௮
அணங்கு-அழகு, வருத்தம், ௩
அதள்-தோள், ௨௰
அந்தகன்-எமன், ௱௪௫
அந்தர்-குருடர், ௪௯௩
அந்திமாலை-௨௮௧
அப்பு-நீர், ௩௧௯
அமயம்-சமயம், ௯௪
அமலம்-குற்றமற்ற, ௱௨௩
அழுங்கி-மனம்வருந்தி, ௩௱௭
அம்புசாதம்-தாமரை, ௮௯
அயர்ச்சி-தம்வசமழிதல், ௫௨௧
அரண்-காவல், ௭௬
அரந்தை-துன்பம், ௩௩௭
அரவபந்தம்-நாகபந்தம், ௨௱௰
அருட்கவி-திருவாசகம், ௨௧
அலகிடல்-துடைப்பத்தால் தூசு அகற்றல், ௱௰௭
அலந்தவர்-துன்புற்றவர், ௱௨௫
அலையுஞ்செழுநீர்-கங்கை, ௨௰
அலையும்-அசைகின்ற, ௨௰
அவம்-அஞ்ஞானம், ௱௪; தீமை; ௧௫, ௩௨௪
அவிர்-விளங்குகிற, ௨௩
அவ்வியம்-பொறாமை. ௩௩௯
அழுங்கல்-வருந்தல், ௱௮௪
அளவி-கலந்து, ௧௬
அளித்தனன்-கொடுத்தான், ௨௩
அற்றைஞான்று-அன்று, ௱௰
அனந்தம்-மிக்க, ௩
அன்ன-ஒத்த, ௭

## ஆ

ஆகுலம்-வருத்தம், ௬௮
ஆசனம்-பீடம், ௯௩
ஆசு-குற்றம், ௱௮௫
ஆடகக்கிரி-மேருமலை, ௱௭௫
ஆடகமன்று-பொன்னம்பலம், ௫௧௪
ஆடகம்-பொன், ௩
ஆண்டு-கயிலை, ௩௩௧
ஆதரித்து-விரும்பி, ௩௫௮
ஆதுலர்-வறிஞர், ௨௬
ஆயம்-கூட்டம், ௩௯௨
ஆர்த்து-கட்டி, ௨௫௧
ஆழி-கடல், ௪௧௫
ஆறு-வழி, ௭௪
ஆனனம்-முகம், ௩௪
ஆன்ற-சிறந்த, ௭௬

## இ

இசை-கீதம், ௪௱௭
இசைந்து-ஒத்துக்கொண்டு, ௨௱௯

குறித்திட-வழிபட, ௩௮௩
குறைந்து-தாழ்ந்து, ௨௧௪

கூ

கூசு-அஞ்சுகின்ற, ௧௮௮
கூடல்-மதுரை, ௨௩௬
கூர்தல்-மிகுதல், ௱௩௨
கூறு-பங்கு, ௨௮௩
கூற்று-இயமன், ௨௮௩

கே

கேழல்-பன்றி, ௩௮௨

கை

கைதவம்-வஞ்சகம், ௯௩
கைதை-தாழை, ௭௪

கொ

கொக்கு-மா, ௩௯௩
கொட்டு-மண்வெட்டி, ௨௭௮
கொண்டல்-கருமேகம், ௨௨௭, ௭
கொந்து-கொத்து, ௱௰௮
கொள்ளம்-வெற்றி, ௱௬௬
கொன்-பெருமை, ௱௪௧;
அச்சம், ௩௭௭

கோ

கோ-தலைவர், (வாதவூரர்) ௨௨
கோகிலம்-குயில், ௬௧
கோடுகள்-சங்குகள், ௪௩
கோடும்-கொம்பு, ௬௰, ௩௮௭
கோட்டம்-கோணல், ௫௱௫
கோதும்-குடையும், ௩௯௩
கோலம்-அழகு, ௧௮; வேடம், ௨௯

ச

சந்தம்-அழகு, ௪௩௰
சமூகம்-கூட்டம், ௧௯௨
சரிதி-நடையையுடையோன் (நடை-முறைமை), ௨௪௧
சலசம்-தாமரை, ௫௭

சா

சாத்து-தலைச்சாத்து, ௧௯௫
சாம்புவது-வதங்குவது, ௨௬௨
சாலம்-கூட்டம், ௪௩௨
சால்பினர்-தலைவர், ௨௨௬

சி

சிகை-கணக்கு, ௧௭; மயிர், ௧௭
சிங்கா-குறையாத, ௫௩
சிலை-வில், ௱௫௩
சிறுவன்-மூத்த பிள்ளையார், ௧
சினைகள்-கிளைகள், ௬௩

சீ

சீவரம்-அணிகள், ௫௱௫
சீற்றம்-கோபம், ௱௬௧

சு

சுந்தரம்-அழகு, ௨௬௫
சுரிகை-உடைவாள், ௫௩

சூ

சூழ்போந்து-சுற்றி, ௱௭௫

செ

செச்சை-சிவப்பு, ௧௯௮
செண்டு-சவுக்கு, ௧௯௯
செண்டுவெளி-வையாளிவீதி, ௱௮௯
செம்பொருள்-தருமவழியாற் சம்பாதித்த பொருள், ௱௭௭
செய்யகோல்-செங்கோல், ௨௩௬
செவிப்புல நிறைப்போர்-கேட்போர், ௮
செறிவு-இயைபு, ௫௧௬
செறுத்தவர்-பகைவர், ௱௮௰

செ

செற்று-அழித்து, ய

சே

சேடு-சவுக்கு, ௱அகூ
சேண்-விண், கூகூரு
சேறல்-செல்லுதல், உகூகூ

சை

சைவநெறித்தலைவன்-சம்பு
பாதாசிரயர், யஉ

சோ

சோணம்-செம்பொன், கூகூரு
சோதி-ஒளி, சரும

ஞா

ஞாங்கர்-பக்கம், ருகூ
ஞாளி-நாய், சசக
ஞான தினகரன்-ஞான சூரியன்,
கரு

ஞி

ஞிமிறு-வண்டு, கூக

ஞெ

ஞெகிழம்-சிலம்புகள், உருக

த

தகவு-தகுதி, உஅகூ
தகைத்து-தடுத்து, ௱கூச
தடம்-குளம், சஉரு
தணப்பு-நீங்குதல், ௱யஎ
தண்டல்-தண்டனை, உகூஉ
தண்டு-சிவிகை (பல்லக்கு), உரு
தந்திரத்தொகுதி-சேனைக்கூட்
டம், உச
தபனியம்-பொன், சகூ
தமிழ்மாறன்-தமிழைவளர்த்த
அரிமர்த்தன பாண்டியன், உக

தயங்கி-விளங்கி, ௱கூய
தாளம்-முத்து, சச
தரிப்பு-பொறுத்தல், கூகூஉ
தருக்கால்-களிப்பால், சஉகூ
தவளம்-வெண்மை, க
தழல்-நெருப்பு, கூகூச
தனித்தேவி-சிவஞான வதியார்,
யஉ
தறுகணாளர்-வன்கண்ணர், உஎஉ

தா

தாதகி-கொன்றைமலர், கூச
தாரகை-வான்மீன், கரு
தாவுமூர்-அன்பர்களாற் பற்றப்
படுமூர், யக
தாள்-திருவடிகள், ௱கூரு

தி

திகழ்வித்தல்-காட்டுதல், ௱க
திவள-இடைவிட்டொளிர, க
திறம்-வன்மை, உகரு
தீ-மழு, கூஅகூ

து

துகள்-தூசு, ௱அகூ
துகில்-துணி, ஆடை, உருச,
கூச
துங்கம்-உயர்ந்த, ச, கஅஎ, கூஉக
துடி-உடுக்கை, சய, கஅகூ
துணுக்கம்-நடுக்கம், கூ௱
துணிந்த-கந்தையான, உஎஅ
துண்-விரைவுக் குறிப்பு, உகூஎ
துயில்பயிலுதல்-தூங்குதல்,
துரந்து-வென்று, உஉ
துலை-நிறைகோல், ௱யச
துவக்கு-தொடக்கு, ௱யச
துவசம்-கொடி, உருகூ
துவன்றி-நெருங்கு, கஅஎ

துன்றி-நெருங்கி, ௫௱௪

**தூ**

தூ-சுத்தமான, ௩௨௧
தூங்கும்-அசைகின்ற, ௧௮௯
தூசு-துணி, ௫௱௪
தூணியர்-அம்புக் கூட்டையுடையவர், ௧௯௫

**தெ**

தெய்வச்சாலி-திருவாதவூரர், ௧௫
தெரியல்-மாலை, ௯௨
தென்னவன் செங்கோல் முதல்வர்-திருவாதவூரர், ௰௨

**தே**

தேக்கும்-நிறைந்த, ௪௨௭
தேரா-உணர்ந்து, ௩௬௩
தேன்-வண்டு, ௫௯

**தை**

தைவரல்-பூசுதல், ௪௫௧

**தொ**

தொக்க-திரண்ட, ௨௫௭
தொக்கார்-கூடினார்கள், ௪௪௯
தொடையல்-மாலை, ௱௰
தொன்மை-பழமை, ௱௪௯, ௪௱௨

**ந**

நக்கான்-சிரித்தான், ௱௩௭
நண்-சேர்த்தல், ௩௫௩
நணுகும்-கைகூடும், ௱௰௫
நந்தும்-மிகும, ௪௫௪
நல்கி, கொடுத்து, ௨௧; வார்த்து, ௱௮௨
நவமணி-ஒன்பது கற்கள் (கோமேதகம் முதலியன,) ௧௮
நவ்வி-மான், ௨௮
நற்றீபம்-கர்ப்பூரதீபம, ௨௧
நன்கு-நற்சகுனம், ௪௬

**நா**

நாஞ்சில்-உழவப்புக்கள், ௨௫௬
நாடில்-ஆராய்ந்தால், ௩௪௯
நாணம்-வெட்கம், ௱௬௮
நாப்பண்-இடையில், ௬௩
நாரிகேரம்-தெங்கு, ௯௯

**நி**

நிகர்-ஒப்பு, ௰௨
நித்தல்-தினமும், ௩௩௪
நிம்பம்-வேம்பு, ௧௮௬
நிரை-வரிசை, ௩௯௫
நிவந்தது-உயர்ந்தது, ௨௫௪
நிறை-பெருங்குணம், ௱௩௬
நிற்றி-நிற்பாய், ௩௫௨

**நீ**

நீரர்-தன்மையர், ௩௨

**நு**

நுகர-அநுபவிக்க, ௭௬; உண்ண, ௨௮௧
நுகர்வித்தார்-உண்பித்தார்கள், ௧௬

**நெ**

நெகிழம்-சிலம்புகள், ௪
நெக்கு-இளகி, ௩௭
நெஞ்சிற்பரப்பு-சித்தவிருத்தி, ௪௰
நெடிதுபோது-மிகுபொழுது, ௪௱௨
நெடு-நீண்ட, ௨௭௪

**நே**

நேசம்-அன்பு, ௧௮௮
நேடினான்-ஆராய்ந்தான், ௨௫௮
நேமி-சக்கரம், ௨௨௭

புளகம்-மயிர்ச்சிலிர்ப்பு, ௬௱௭
புறம்-முதுகு, ௧௮௫
புனிறு-இளமை, ௱௫௰
புனையும் - அணிந்து கொள்க, ௧௫௮
புனைவோன்-அறிவோன், ௬௪௪

### பூ

பூசல்-போர், ௨௱௧
பூண்-அணி (ஆபரணம்) ௨௬
பூவை-காயா, ௬௭

### பே

பேது-மபக்கம், ௱௪௭

### பொ

பொக்கணம்-பிச்சை யெடுக்குங் கருவி, ௪௨௨
பொங்கர்-சோலை, ௬௯௨
பொஙகு-மிக்க, ௨௨
பொத்து-பொய், ௪௯௧
பொய்கை-தடாகம், ௬௬௪
பொருவ-ஒப்ப, ௬
பொன்-அழகு, ௨௬
பொன்ற-கெட, ௪௬௪

### போ

போதம்-ஞானம், ௱௰௧
போது-மலர், ௱௨
போனகம்-உண்டி, ௱௨௧

### ம

மங்கலநாள்-நல்லநாள், ௧௮
மஞ்சனச்சாலை-நீராடுமிடம்,௯௫
மடங்கல்-சிங்கம், ௬௭௭
மடம்-இளமை, ௬௮௯
மதங்கம்-மிருதங்கம், ௨
மதுகை-விருது, ௪௨௬; வலிமை, ௱௰௫
மத்தம்-ஊமத்தை மலர், ௬௮௰
மருண்டு-மயங்கி, ௪௱௭
மருப்பு-(யானைக்) கொம்பு, ௧
மருவாத-தகாத, ௧௪
மல்க-பரவ, ௬௬௫
மழு-நெருப்பு, ௪௯
மழுங்க-ஒளி கெட, ௧௬
மறுகு-தெரு, ௬௮௰
மற்கடவிலங்கு-குரங்கு, ௬௧
மன்பெருவாழ்வு— எல்லாஞ் சிவமாசெயலெனக்கொள்ளுதல், ௫௧௨
மன்றல்-மணம், ௨௱௭

### மா

மாதர்-அழகு, ௬௮௪
மாது-உமையம்மை, ௧
மாத்திரை-தண்டம், ௪௨௨
மாந்தி-உண்டு, ௪௪௬
மாமூகர்-முழுமூடர், ௬௮௯
மால்-பெரிய, ௧
மால்எய்தி-மயங்கி, ௱௬௮
மாறு-பிரம்பு, ௬௱
மாற்றம்-சொற்கள், ௱௮௨

### மி

மிடை-ஏவல், ௬௨௬
மிண்டி-நெருங்கி, ௪௪
மிலைக்கும்-அணிந்துகொள்ளும் ௨௰
மின்-ஒளிர்கின்ற,

### மு

முக்கனி - மூன்று பழங்கள் (வாழை, மா, பலா), ௧௬
முகப்பினில்-முன், ௱௭௬
முகமன்-இன்சொல், ௨௱௧
முதல-ஆதி, ௬௪

முப்பொருள்-பதி, பசு, பாசம், ளஉ௰
முயலும்-செய்கின்ற, கஎ
முரன்று-ஒலித்து, ருக
முழவங்கள் - வாத்தியங்கள், ௬௬௬

## மூ

மூகை-ஊமை, சஙக
மூண்ட - (படை) யெடுத்து வந்த, ௰
மூரல்-பல், உருக

## மெ

மெய்காவலர் - மெய்காப்பாளர், சளக
மெய்ப்பொருள்-கலவிப் பொருள் (ஞானம்), ௬உ௰
மெய்வாக்கு-திருவாசகம், ளகூஎ

## மே

மேதகு-குணமிக்க, ளருகூ
மேவலர்-பகைவர், ளசரு
மேழிச் சென்னி விக்கிரமன்-மகிடாசுரன், ௬அ௬

## மை

மை-கறுத்த, கூ
மைதவா - மயக்க மொழியாத, ள௰௬
மைத்த-இருள், ருகூ
மையல்-மயக்கம், ள௬௰

## மொ

மொக்குள்-நீர்க்குமிழி, ௬ள௬

## மோ

மோகரிக்கும்-சத்திக்கும், ௬ளஉ

## யா

யாணர்-அழகு, புதிய, ரு௬௬

## வ

வடம்-மாலை, உருச
வண்ணம்—அழகு, சஉகூ
வதி-வழி, சஎ, ௬எஎ
வயங்கும்-விளங்கும், ககரு
வல்-விரைவு, ௬௬க
வல்லை-விரைவாக, ளகூகூ
வழுவா-தவறாமல், ௬ரு௰
வளைப்பு-வரம்பு செய்த வளைவுக் கோடு, உசரு
வனிதையர்-பெண்கள், ௬௬

## வா

வாசி-குதிரை, ௬கூ, ளஅரு
வாம்-தானம், ளஅ௬
வாலபானு-சூரியன், ளஎரு
வாள்-ஒளி, உளகூ

## வி

விக்கிரமன்-யுத்தவீரன், ௬அ௬
விசித்து-கட்டி, ளகூஅ
விடையேறி-இடபமேறின விறைவன், ௰க
விதி-பிரமன், ளஅச
வியந்து-அதிசயித்து, ளரு௬
விலங்கல்-மலை, சகூ
வில்-ஒளி, ளஎச
வில்துவசத்தன்-வில் கொடியையுடைய சேரன், ௬கூ
விழிக்க-பார்த்தமையால், ளஉஉ
விழுப்பம்-பெருமை, உஅரு

## வீ

வீறு-பெருக்கு, உகூஅ

## வெ

வெகுட்சி-சினம், கோபம், ளகூச, உகஉ

வெகுண்டு-கோபித்து ௪௫௭
வெகுளி-கோபம், ௩௫௭
வெய்துயிர்த்து - பெரு மூச்சு விட்டு, ௫௭௧
வெய்யவன்-சூரியன், ௱௰௧
வெருவ-பயமுண்டாக, ௱௬௨
வெள்ளிலை-வெற்றிலை, ௱௧

## வே

வேடை-விருப்பம், ௨௭௮
வேட்டு-விரும்பி, ௯௱௯
வேட்டுவன்-குளவி, ௱௧௯
வேரி-மணம், ௪௨௰
வேழம்-யானை, ௨௫

## வை

வைகல்-சேர்ந்திருத்தல், ௯
வையகம் - உலகத்திலுள்ளார், ௨௫

---

P. R. Rama Iyar & Co. Printers Madras.

# பிழையும் திருத்தமும்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| கஎ | க௩ | தாழ்வ | தாள்வ |
| உய | உஉ | முறைத்தார் | முரைத்தார் |
| உ௩ | ச | ளுயிருடன் | ளுயிருடம் |
| உச | ய | நிலைமை வுற்றூர் | நிலைமை யுற்றூர் |
| உரு | சா | சிவசொற் | சிலசொற் |
| ௩க | கூ | நன்றிடு | நின்றிடு |
| ,, | கரு | மாநிலப் | மாநிலம் |
| ௩௩ | உஎ | செறிதினத்தினிவ் | செறிதினத்தினி |
| ௩ரு | உச | செயவார | செய்வார் |
| ௩சா | உசா | வெமபரியி | வெம்பரியி |
| ௩எ | க௩ | மாமதுசேர | மாமதுரேச |
| ௩அ | கஎ | வெணடாளந் | வெண்டாளந் |
| ௩கூ | உக | வெள்ணி | வெள்ளி |
| சரு | ரு | யுள்ளே னேடிஞு | யுள்ளே நேடிஞு |
| சஅ | உரு | கூற்றிஞுண்டா | கூற்றிலுண்டா |
| சாய | கசா | னெனறும | னென்றும் |
| சாக | ககூ | சிலஞளிங் | சிலநாளிங் |
| எசா | கக | தைவருநீருஞ் | தைவருநீறுஞ் |
| அய | கஎ | பிறிவறி | பிரிவறி |